கோயில்பாளையம் என்னும்

# கௌசைத் தலபுராணம்

(மூலமும் உரையும்)

ஆசிரியர்
சிரவையாதீனம்
**தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்.**

உரையாசிரியர்
சிரவையாதீனக் கவிஞர்
**புலவர். ப.வெ. நாகராஜன்**

பதிப்பாசிரியர்
சிரவையாதீனப் புலவர்
**கு. சிவலிங்கம்** எம்.ஏ., பி.எட்.

**திருமலை - திருப்பதி தேவஸ்தானத்திட்ட நிதி உதவி**
**வெளியீடு**
**2005**

நூற்பெயர் : **கௌசைத் தலபுராணம்**
மூலமும் உரையும்

நூலாசிரியர் : தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

உரையாசிரியர் : புலவர். ப.வெ. நாகராஜன்

பதிப்பாசிரியர் : கு. சிவலிங்கம் எம்.ஏ., பி.எட்.,

பதிப்பு : உரையுடன் முதல் பதிப்பு

ஆண்டு : 2005

படிகள் : 1000

விலை : ரூ. 30

அச்சகம் : சிவாசலபதி பிரிண்டர்ஸ்
கோவை

சமயநூல்கள் வெளியிடுவதற்கு நூலாசிரியர்களுக்கு உதவி செய்யும் திருமலை – திருப்பதி தேவஸ்தானத் திட்டத்தின் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியாகிறது.



நூல் கிடைக்கும் இடம்: சிரவணபுரம்,
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி (அ. நி.)
கோயம்புத்தூர் – 641 006.

# பொருளடக்கம்

# நன்றி மலர்



உயர்வற உயர் நலமுடையவன் எவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என் மனனே.

# ஆசியுரை

*சிரவை யாதீன கர்த்தர்*

*தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்*

இந்து சமய வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும் சிறப்பானவை. இவற்றின் சிறப்பைக் கூறும் நூல் தலபுராணம் ஆகும். இது தமிழுக்கே சிறப்புரிமை வாய்ந்த இலக்கியவகை ஆகும் என்பது தமிழ் இலக்கிய வல்லுநர்களின் கருத்து. 14ஆம் நூற்றாண்டிலிருந்து 20ஆம் நூற்றாண்டுவரையான 600 ஆண்டுகளில் 400க்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தோன்றியுள்ளன.

சிரவையாதீனத்தின் இரண்டாம் பட்டமாக அருட்செங்கோல் செலுத்திய போற்றுதலுக்குரிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் அவர்கள் மூன்று தலபுராணங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றுள் ஒன்றாகிய கௌசைப்புராணம் மூலம்மட்டுமாக 1936இல் முதல் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுது நல்ல உரையுடன் செம்பதிப்பாக வெளிவருகிறது.

கொங்கு நாட்டுக் கச்சியப்ப முனிவர் எனச் சான்றோர்களால் போற்றப்பெறும் தவத்திரு சுவாமிகளின் படைப்பாற்றல் வியப்புக்குரியது.தமிழில் உள்ள பற்பல வகையான சிற்றிலக்கிய வகைகளையும் பக்தமான்மியப் பெருங்காவியத்தையும் இயற்றியுள்ள வள்ளற்பெருந்தகை நம் சுவாமிகள். நடைசற்றுக் கடினமாக இருப்பினும் கருத்துச் செறிவு, இலக்கியநயம், சாத்திரநுட்பம், சித்திரத்தன்மை, நல்லறிவு புகட்டுதல் போன்ற பல நலன்களைப் பெற்றுப் பொலிவது.

சிரவையாதீனத்திற்குரிய செந்தமிழ்ப் பனுவல்கள் அனைத்தையும்தெளிவான உரையோடு அமைந்த செம்பதிப்பாக மலிவு விலையில் பதிப்பிக்க விழைகிறோம். இத்துறையில் கௌமார மடாலய அன்பர்களின் உதவி எதிர்பார்க்கப்படுகிறது.

கௌசைத்தலபுராணம் ஒரு மொழி பெயர்ப்பு நூல் அன்று. செவிவழிச் செய்திகளை ஆதாரமாகக் கொண்ட முதல்நூல். இந்நூலைப்பற்றி நம் ஆதீனக்கவிஞர் புலவர் ப.வெ.நா அவர்கள், "செய்யுள் எண்ணிக்கையில் சிறியதாக இருந்தாலும் தலபுராண இலக்கியத்தின் கூறுகள் எல்லாவற்றையும் பெற்றுத் துலங்குகிறது. நாட்டுப் படலத்தில் ஐந்திணைவளம், நகரப்படலத்தில் சித்திர கவிகள், இயமதருமன் வழிபடு படலத்தில் தோத்திரக் கவிகள், ஆங்காங்கு மூர்த்தி தலதீர்த்தங்களின்

பெருமை, இடையிடையே சாத்திரக் கருத்துக்கள் என இந்தத் தலபுராணம் செறிவாக அமைந்துள்ளது." என்கிறார். (சிரவையாதீனப் பதிப்புகள் . ப.43–44)

அவரே இத்தலபுராணத்திற்கு உரை எழுதியுள்ளார். உரை தெளிவாகவும், இலக்கியச் சமய மரபுகள் மாறாமலும் உள்ளது. சிரவையாதீன இலக்கிய வளர்ச்சிக்காக ஒல்லும் வகையால் எல்லாம் உழைக்கும் அவருக்குப் பாராட்டுக்கள்.

நம் ஆதினப்புலவர் திரு.கு. சிவலிங்கம் அவர்கள் இந்த இலக்கியத்தை மிகச் சிறப்பாகப் பதிப்பித்துக் கொடுத்துள்ளார். இறையன்பு, தமிழார்வம், உழைப்பு, துடிப்பு மிக்க அன்பர் சிவலிங்கம் அவர்கள் மேலும் இத்தகைய தமிழ்ப்பணிகளில் ஈடுபட்டுப் புகழீட்டிச் சீரோடு வாழ வாழ்த்துகின்றோம்.

இந்தத் தலபுராணவெளியீட்டிற்குத் திருப்பதி தேவஸ்தானம் கணிசமாகப் பொருளுதவி செய்துள்ளது. வடமலையப்பனைப் பின்பற்றித் தமிழகக் கோயில்நிர்வாகங்களும் இத்தகைய தெய்வீகத் திருப்பணிகளில் முழுமையாக ஈடுபடும் நாள் விரைவில் முகிழ்க்கட்டும். திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகளின் இக்கொடை பாராட்டுதற்குரியது.

கௌமார மடாலய அன்பர்கள் ஆதீன வெளியீடுகளை வாங்கிப் படிப்பதோடு தமிழ் கூறும் நல்லுலகில் இவற்றைப் பரப்ப வேண்டும் என விழைகிறோம். கௌமார சபையின் நூற்றாண்டு வருடத்தில் (2007) நம் இலக்கியங்கள் எல்லாம் தமிழகம் முழுவதற்கும் அறிமுகமாகியிருக்க வேண்டும். இது நிறைவேறக் குருவருளும் திருவருளும் துணைபுரியட்டும்.

அருள்பொலி கருணா கரவல்லி மகிழும்
அற்புதக் காலகா லேசன்
தெருள் பொலி அடியார்க் கருள்புரிந் திடுசீர்
செப்பிடும் வைப்பினை யாம்இப்
பொருள்பொலி காதை படிப்பவர் கேட்போர்
புகல்பவர் மகிழ்வுறப் புரிவோர்
மருள்பொலி துன்ப வலைப்படா இன்ப
வாரிதி யூடமை வாரே.



தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

# பதிப்புரை

கொங்குநாட்டுத் திருக்கடையூர் (திருக்கடவூர்) எனப் போற்றப் பெறும் கௌசைத் தலபுராணம் சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பட்டுள்ளது. இந்தப் புனிதமான சிவத்தலம் கோவையிலிருந்து சத்தியமங்கலம் செல்லும் பெருவழியில் கோவைக்கு வடக்கே ஏறத்தாழ இருபது கல் தொலைவில் உள்ளது.கோவை காந்திபுரப் பேருந்து நிலையத்திலிருந்து ஏராளமான பேருந்துகள் இத்தலம் வழியாகச் செல்கின்றது.

கோயில்பாளையத்தில் மூலவர் திருப்பெயர் காலகாலேசுவரர் என்பது ஆகும். மூலவராகிய சிவலிங்கத்திருமேனி இயமதருமனால் நீர்நுரையைத் திரட்டிச் செய்யப்பட்டது. அம்பிகையின் திருப்பெயர் கருணாகரவல்லி. ஆலயத்தில் கரிவரதராஜப் பெருமாளும் கோயில் கொண்டுள்ளார். இவ்வாலயத்திலுள்ள தென்முகக்கடவுள் (தட்சிணாமூர்த்தி) சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். இத்தலபுராண வரலாற்று உரைநடை அடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

தலபுராண ஆசிரியராகிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் இலக்கியவல்லுநர்களால் கொங்குநாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றப்படுபவர். கொங்குநாட்டுப் புலவர்களிலேயே எண்ணிக்கையில் மிக அதிகமான பாடல்களைப் பாடியுள்ளார் என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பக்தமான்மியப் பெருங்காப்பியம், மூன்று தல புராணங்கள் மற்றும் ஏராளமான சிற்றிலக்கியங்களைச் சுவாமிகள் கன்னித் தமிழுக்குக் காணிக்கையாக்கியிருக்கிறார்.

கௌசைத் தலபுராணம் பாயிரத்தைத் தவிர ஐந்து படலங்களையும் மொத்தம் 195 விருத்தங்களையும் கொண்டது. இது அளவாற் சிறியதாயினும் அருளாற்பெரியது. இது எந்த ஒரு முன்னூலின் தழுவலோ மொழிபெயர்ப்போ அன்று.செவிவழிச் செய்திகளின் அடிப்படையில் நூலாசிரியரே இயற்றியுள்ள முதல் நூல் இதுவாகும்.சுவாமிகளின் வாக்கு கருத்துச் செறிவு மிக்கதாகவும், சிந்தித்துப் பொருள் காணவேண்டியபடி சற்று கடினமான நடையிலும் இருக்கும்.இலக்கண அமைதி, பொருள் வளம், அணி எழில், சித்திரத் தன்மை ஆகியன நிறைந்து இத்தலபுராணம் ஒரு சீரிய சமய இலக்கியமாகப் பொலிகிறது.

இந்த கௌசைத் தலபுராணத்திற்குப் பெரும்புலவர் ப.வெ. நாகராஜன் அவர்கள் மரபு மாறாமல் உரைகண்டுள்ளார். உரை அளவில் சிறியதாயினும் இன்றியமையாத செய்திகள் அனைத்தையும் தன்பாற்

கொண்டுள்ளது. திரு.ப.வெ.நா. அவர்களின் உரைத்திறன் இப்புராண உரையிலும் வெளிப்பட்டுள்ளது.

சிரவை யாதீன கர்த்தர் போற்றுதலுக்குரிய தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள் சிரவையாதீனத்தோடு தொடர்புடைய இலக்கியங்கள் அனைத்தையும் செம்பதிப்புகளாக மலிவு விலையில் வெளியிட வேண்டுமென்று திருவுளங்கொண்டு ஆவன செய்து வருகிறார். சிரவையாதீனத்தின் இலக்கியத்துறை இயக்குநரும் என் ஆசானும் ஆகிய புலவர் ப.வெ.நா. அவர்கள் இத்திருப்பணியில் உறுதுணையாக இருக்கிறார்.

சிரவையாதீன கர்த்தரவர்கள் இந்தக் கௌசைத்தலபுராணத்தைப் புலவர் ஐயாவின் உரையுடன் பதிப்பிக்கும்படி எளியேனுக்கு அருளாணை வழங்கினார். அதன்படி எளியேன் இத்தலபுராணத்தைப் பதிப்பித்துள்ளேன். அறிஞருலகம் குறைகளைந்து ஏற்றுப் போற்ற வேண்டுகிறேன்.

இந்த அரிய சிவத்தமிழ்ப்பணியை அடியேனுக்கு வழங்கியருளிய தவத்திரு. சிரவையாதீன கர்த்தர் அவர்களின் திருமுன்புக்கு என் பணிவான நன்றியையும் வணக்கங்களையும் உரித்தாக்கிக் கொள்கிறேன். இந்நூலுக்கு உரை எழுதியதோடு நூற்பதிப்பிலும் துணைபுரிந்த என் ஆசான் சிரவை ஆதீனக்கவிஞர் புலவர் ஐயா அவர்களுக்கு நன்றி. எனக்கு நல்வழிகாட்டியகவும். இந்நூல் அச்சுபிழை திருத்தத்திற்கு உறுதுணையாக இருந்து உதவிய சுவடிக் கலைஞர் ஆர். கிருஷ்ணன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி.

இந்தத் தலபுராணம் பதிப்புக்குத் திருப்பதி திருமலை தேவஸ்தானம் பொருளுதவி செய்துள்ளது. இவ்வள்ளன்மைக்காகத் திருப்பதி தேவஸ்தான நிர்வாகிகள் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன்.

இந்த நூலை இயன்றவரைப் பிழை இல்லாமலும் அழகாகவும் அச்சிட்டுக் கொடுத்த கோவை சிவாசலபதி பிரிண்டர்ஸ் நிறுவனத்தைச் சேர்ந்த அனைவர்க்கும் நன்றி.

இந்தத் தலபுராணத்தைப் படிப்பவர்களுக்கு எல்லாத் துன்பங்களும் விலகி விடும் என்பது உறுதி. ஆன்மீக அன்பர்கள் இந்நூலைப் படித்து நிறைகுறைகளை அறிவிக்க வேண்டுகிறேன்.

காலகா லேசன் கருணா கரவல்லி
சாலநலம் தந்தருள்வர் தாம்.

*சிரவணபுரம்,* *கு. சிவலிங்கம்*
**15.7.2005**

# தல வரலாறு

## 1. இயம தருமன் வழிபட்டது :

சோழ நாட்டில் திருக்கடவூரில் மிருகண்டேயன் என்னும் ஓர் அந்தணர் வாழ்ந்து வந்தார். அவர் பெரிய சிவபக்தர். அவருடைய மனைவியின் பெயர் மருத்துவவதி. திருமணமாகி நீண்ட நாள் ஆகியும் இவர்களுக்குப் புத்திரப்பேறு வாய்க்கவில்லை. எனவே திருக்கடவூர் இறைவனைக் கருதிப் பிள்ளைப் பேற்றிற்காகத் தவம் புரியத் தொடங்கினர். தவத்தின் நிறைவில் சிவபெருமான் காட்சியளித்தார்.மறையவரின் வேண்டுகோளைச் செவிமடுத்த இறைவன், "உனக்குப் பாவியாக நூறாண்டு உயிர்வாழும் மகன் வேண்டுமா ? அல்லது நற்பண்புகளுடைய பதினாறு வருடங்களே உயிர்வாழத்தக்க மைந்தன் வேண்டுமா ?" எனக் கேட்டார். மிருகண்டேயன், "குறைந்த ஆயுள் உள்ளவனாக இருப்பினும் பண்புள்ள மைந்தனே வேண்டும்" என இரந்தார். சிவபெருமான் அவ்வாறே வரம் அளித்துவிட்டு மறைந்தார்.

உரிய காலத்தில் மருத்துவவதிக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு மார்க்கண்டேயன் எனப் பெயரிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தனர். மார்க்கண்டேயன் அழகு, வலிமை, கல்வி, பணிவு முதலியவற்றில் சிறந்து விளங்கினான். மகனின் சிறப்புக்களைப்பார்த்துப் பெற்றோர் உள்ளம் உவந்தாலும் அவன் பதினாறு வயது நிறைந்த உடன் மாண்டுவிடுவானே என மனக்கலக்கம் உற்றனர்.

அதனைப் பார்த்த மார்க்கண்டேயன் தன் பெற்றோர்களிடம் அதன் காரணத்தைக் கேட்டான். அவர்கள் எல்லா உண்மைகளையும் மறைக்காமல் கூறினர். கேட்டவன் சற்றும் மனம் கலங்காமல், "செயற்கரிய தவத்தால் என் மரணத்தை வெல்வேன்" என உறுதிபூண்டு திருக்கடவூர்ச் சிவபெருமானைச் சிந்தையில் நிறுத்தித் தன் பதினாறாம் வயதுவரை தவம்புரிந்தான்.

மார்க்கண்டேயனின் ஆயுள் முடியவேண்டிய அன்று இயம தூதுவர்கள் அவன் உயிரைக் கவர்ந்து செல்ல வந்தனர். முனிகுமாரனின் தவக்கனலைத் தாங்கமாட்டாமல் இயமபடர்கள் ஓடிவிட்டனர். இதனையறிந்த தருமன் மிக்க சினத்துடன் தானே திருக்கடவூர் ஆலயத்திற்குச் சென்றான். இயமனைப் பார்த்தும் மார்க்கண்டேயன் சற்றும் அஞ்சவில்லை. அதனால் மேலும் கோபங்கொண்ட தருமன் தன் பாசத்தை வீசினான். உடனே மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள யமபாசம் சிவலிங்கத்திருமேனியையும் வளைத்தது.

உடனே சிவலிங்கத்திலிருந்து இறைவன் வெளிப்பட்டு இயமனை இடது காலால் உதைத்துக் கொன்றார். மைந்தனுக்கு என்றும் பதினாறு வயதுடையவனாக வாழ வரம் வழங்கினார். உயிர்களை உடல்களினின்றும் பிரிக்கவேண்டிய இயமனே இறந்துவிட்டதால் உலகத்தில் பிறந்தவர்கள் யாருமே இறக்கவில்லை. இதனால் நிலத்தின் பாரம் பொறுக்க முடியாததாகி, நிலமகளும் தேவர்களும் வேண்டியதால், சிவபிரான் இயமதருமனை உயிர்ப்பித்தார். கொங்கு நாட்டில் பேரூருக்கு வடகிழக்கில் சிவலிங்கம் ஒன்றைத் தாபித்து, நீர்நிலை ஒன்றை உண்டாக்கி எஞ்சிய தன் பாவத்தைப் போக்கிக் கொள்ளுமாறு கழுவாய் கூறி இறைவன் இயமனுக்குத் திருவருள்புரிந்தார்.

இதனைக் கேட்ட காலன் சிவபெருமானை வணங்கி, விடைபெற்றுப் பேரூரில் பட்டீசரை வழிபட்டபின் இன்றைய கோயில்பாளையம் வந்தடைந்தான். இந்த இடம் அப்போது காடாக இருந்தது. சில நாள் இயமன் அங்கு இருந்தபோது ஒரு நாள் அவன் கேட்குமாறு ஓர் ஆகாயவாணி ஒலித்தது. "இந்த இடத்தில் உன் தண்டாயுதத்தை அழுத்தினால் நீர் பொங்கி வந்து நீர்நிலை ஒன்று உண்டாகும்: அதில் மிதக்கும் நுரையைச் சேர்த்து, ஒரு லிங்க வடிவம் ஆக்கி வழிபடுக" என்று அந்த வானொலி இயம்பியது. இயமன் அவ்வாறே செய்தான்.

நீண்ட நாட்கள் தருமன் தான் நிறுவிய நுரை இலிங்கத்தை வழிபட்டு வந்தான். அப்போது ஒரு நாள் சிவபெருமான் இடப்பக்கத்தில் உமாதேவியுடன் விடையில் காட்சியளித்தார். தரிசித்தகாலன் பெருமகிழ்ச்சி கொண்டு, பலவாறு போற்றினான்; திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இறைவன் வேண்டிய வரத்தைக் கேட்கச் சொன்னார். இயமன், "இறைவனே! அடியேன் தேவரீரை எந்நிலையிலும் மறக்காமல் இருக்கவேண்டும். தாங்கள் திருக்கடவூரில் என்னைச் சங்கரித்துக் காலகாலன் எனப் பெயர் கொண்டதைப் போலவே இந்தத் தலத்திலும் அதே பெயரை ஏற்றுக் கொள்ள வேண்டும். இங்குத் தேவரீரைத் தரிசித்து வழிபடுபவர் அனைவருக்கும் வீட்டுப்பேற்றை அருளவேண்டும். இங்கு இறைவியின் திருநாமம் கருணாகரவல்லி (துயவிற்கு இருப்பிடமாகிய கொடி போன்றவள்) என வழங்கப்பெறவேண்டும். அடியேனுடைய தண்டாயுதத்தால் உண்டாக்கப்பெற்ற நீர்நிலை காலப்பொய்கை, தண்ட தீர்த்தம் என வழங்கப்படவேண்டும். இதில் நீராடுவோர் தம் நோய்கள் முதலிய துன்பங்களிலிருந்து விடுபட வேண்டும். தாங்கள் இந்தத் தலத்தில் சிறப்பாக எந்தக்காலத்திலும் நிலையாக எழுந்தருளியிருந்து அருள்பாலிக்க வேண்டும். " என்பனவற்றை வரங்களாக வேண்டினான்.

இறைவன் இவை எல்லாவற்றிற்கும் இசைவளித்துவிட்டு மறைந்தார். இயமன் தன் ஊர் திரும்பித் தன் தொழிலில் ஈடுபட்டான்.

## 2. விசுவாமித்திர முனிவர் வேள்வி இயற்றியது :

ஒரு சமயத்தில் கௌசிகர் எனப்படும் விசுவாமித்திர முனிவர் காசியில் இருந்தார். அப்போது ஒரு நாள் சிவபெருமான் கௌசிகரின் மனவெளியில் திருப்பேரூரைக் காண்பித்து, "காசியிலாவது உயிர்களுக்குக் காலபைரவரின் தண்டனை உண்டு; திருப்பேரூரில் அதுவும் இல்லை. மேலும் அடியார்களுக்குக் கருணை காட்டுவதில் இத்தலத்திற்கு இணையே இல்லை" என உணர்த்தினார். இதனைக் கருத்திலேற்ற கௌசிகர் கொங்கு நாட்டிற்கு வந்து திருப்பேரூரில் பட்டீசரைத் தரிசித்து வழிபட்டார்.

பட்டீசர் கௌசிகருக்குப் பல வரங்களை வழங்கினார். அப்போது விசுவாமித்திரரின் மனவெளியில் கௌசையில் இயமனால் நிறுவப்பெற்ற காலகாலேசர் திருவடிவம் காட்சியளித்தது. இதனைக் கண்டதும் முன்பு இயமன் வழிப்பட்ட வரலாற்றையும், எதிர்காலத்தில் கரிகால் சோழனால் அந்த ஆலயம் மிக்க சிறப்புப்பெற உள்ளது என்பதையும் தம் ஞானக்கண்ணால் அறிந்தார். அத்தலத்தைத் தரிசிக்க விரும்பிப் பட்டீசரிடம் வணங்கி விடைபெற்று இங்கு வந்தடைந்தார். புனிதமான கௌசிக நதியில் (அப்பொழுது இந்தப் பெயர் ஏற்பட்டிருக்கவில்லை) நீராடிக் காலகாலேசுரரை வழிபட்டுத் துதித்தார்.

கௌசிக முனிவர் இத்தலத்தில் மக்கள் நலம்கருதி வேள்வி ஒன்றை இயற்றினார். தமக்காக எப்பயனையும் விரும்பாமல் உலக மக்களின் நன்மைக்காகவே விசுவாமித்திரர் வேள்வி இயற்றி இத்தலத்திற்கு வருபவர்கள் அனைவருக்கும் பிறப்பும் இறப்பும் இல்லாமல்செய்தார். அவர் யாகம் செய்த இடம் இன்றும் திருநீற்று மேடு என்னும் மணல்மேடாகக் காட்சி தருகிறது. இந்தத் திருநீற்றுமேட்டின் மண்ணைத் தண்டதீர்த்தத்தின் தண்ணீரில் குழைத்து உடம்பில்பூசிக்கொண்டு கௌசிக நதியில் நீராடினால் பாவங்கள் எல்லாம் நீங்கிவிடும்.

கௌசிக முனிவர் இவ்வாறு வேள்விகளாலும், அருச்சனை முதலியவற்றாலும் காலகாலேசரை வழிபட்டுவரும் காலத்தில் ஒருநாள் இறைவன் காட்சியளித்தான். விசுவாமித்திரர் வணங்கிப் பலவாறு தோத்திரம் புரிந்தார். இறைவன், "உனக்கு வேண்டும் வரங்களைக் கேள்; தருகிறோம்" என்றார். கௌசிகர் வணங்கி, "சுவாமி! இத்தலமும் ஆறும் என்பெயரால் கௌசிகபுரி என்றும், கௌசிக நதி என்றும்

வழங்கப்படவேண்டும். இங்குக் கருணாகரவல்லி முதலியோருக்கும் தனித்தனிச் சந்நிதிகள் அமைய வேண்டும். எளியேன் வேள்விகளைச் செய்த இடத்தில் எடுக்கும் திருநீற்றால் மக்களின் பிணிகளும் துன்பங்களும் நீங்க வேண்டும். தேவரீர் அடியேனின் உள்ளத்தில் அரைக்கணமும் நீங்காமல் எழுந்தருளியிருக்கவேண்டும்" என வேண்டினார். காலகாலேசர் எல்லாவற்றையும் வழங்கியருளினார்.

### 3. *கரிகாற்சோழன் திருப்பணி செய்தது :*

சோழநாட்டை ஆண்ட விக்கிரமசிங்க சோழனின் மைந்தன் கரிகாற்சோழன் ஆவான். உரிய வயதில் திருமணம் செய்துகொண்டு, கரிகாலன் ஆட்சிப் பொறுப்பேற்றுச் சிறப்பாக ஆட்சி செய்துவந்தான். குடிமக்களுக்கு ஊறு விளைக்கின்ற விலங்குகளை அழிப்பதற்காக ஒருநாள் அவன் வேட்டைக்குச் சென்றபோது ஒரு பன்றி எதிர்ப்பட்டது. அது ஒரு குளத்தில் நீர் அருந்துவதைப் பார்த்த மன்னன் அதன்மேல் அம்பை விட்டுக் கொன்றான். உடனே அதன் உடலிலிருந்து ஒரு பூதம் தோன்றி, "அரசே! நான் பன்றி அல்லன்; ஒரு வேதியன். என் உறவினர்களால் என் தவத்திற்கு இடையூறு நேராமல் இருக்கப் பன்றி வடிவை எடுத்துக் கொண்டேன். அவ்வுடலை அழித்துக் கொன்ற உன்னை எளிதில் விடமாட்டேன்" என்றது. இதனால் கலக்கமுற்ற கரிகாலன் சிவனடியார்களாகிய அந்தணர்களிடத்தில் இந்தத் தீவினை நீங்குவதற்குரிய கழுவாயை வேண்டினான். அவர்கள் சிவத்தல வழிபாட்டால் இப்பாவம் ஒழியும் என்றனர். அதன்படிக் கரிகாலன் தில்லை முதலிய பல தலங்களுக்கும் சென்று பணிந்தான். கொலைப்பழி நீங்கவில்லை. இந்நிலையில் அவன் நாரதரைச் சந்தித்தான். அவரிடம் தன் குறையைக் கூறி வருந்தினான்.

நாரதர் கரிகாலனை நோக்கி, "மன்னனே! அஞ்சாதே. உன் சிவத்தல வழிபாட்டின் பயனாகவே என்னைக் காணப்பெற்றாய். கொங்கு நாட்டின் திருப்பேரூரில் உன் கொலைப்பழி நீங்கும்; அங்கே செல்" என அறிவுறுத்திவிட்டுத் தன் வழியே சென்றுவிட்டார்.

நாரதரின் உபதேசப்படிப் பேரூர் வரும்வழியில் திருவானைக்கா வந்தடைந்தான். அப்போது பார்வதிதேவியின் பணிப்பெண்கள் எழுவர் ஒரு சாபத்தால் அங்கு மானிட மகளிராக இருந்து வந்தனர். அச்சாப வரலாறு பின்வருமாறு : இமயமலையில் பார்வதி தேவி தவம்புரிந்து கொண்டிருக்கும்போது தோழியர் பூசைக்குப் பூப்பறிக்கச் சென்றனர். அப்பொழுது அங்கு வந்த கந்தருவன் ஒருவனைப் பார்த்து எழுவரும் காதல் ________னர். இதனால் அம்மையின் வழிபாட்டிற்கு உரிய நேரத்தில் மலர்கள்

சென்றடையவில்லை. அதனால் சினங்கொண்ட அம்மை அந்த எழுவரையும் மானிட மகளிராகப் பிறந்து காமம்துய்க்கச் சபித்துவிட்டார். மேலும் கரிகாலனோடு சேர்ந்து திருப்பேரூர் சென்று வழிபட்டால் சாபம் நீங்கும் எனக் கழுவாயும் கூறினார். அதன்படி அவர்கள் எழுவரும் திருவரங்கத்தில் சார்ங்கன் என்பவருக்குப் புதல்விகளாகத் தோன்றி வளர்ந்து வந்தனர்.

கரிகாற்சோழன் திருவானைக்கா வந்திருக்கும் செய்தி அறிந்த அவர்கள், அவனைச் சந்தித்து, தம் வரலாற்றை விளக்கிக் கூறினர். கரிகாலன் அக்கன்னியர் எழுவருக்கும் தனித்தனிப் பல்லக்குகளைக் கொடுத்து, அவர்களையும் உடன் அழைத்துக்கொண்டு பேரூர்வந்து, நொய்யலில் நீராடிப்பட்டீசரை வழிபட்டான். பட்டீசர் காட்சியளித்துக் கன்னியர்களுக்கு முத்தியை அருளிக் கரிகாலனுக்கு அவன் வேண்டியவற்றை எல்லாம் வழங்கினார்.

எங்கு சென்றும் நீங்காத தன் கொலைப்பழி கொங்கு நாட்டில் ஒழிந்ததால் கரிகாலன் இந்நாட்டில் உள்ள சிவத்தலங்களில் திருப்பணி செய்ய விரும்பினான். அதற்காக இந்நாட்டிலுள்ள சிவத்தலங்களை அறிந்துவருமாறு தன் ஏவலர்களைப் பல இடங்களுக்கும் அனுப்பிவைத்தான். அவ்வாறு சென்றவர்கள் கௌசிகபுரியின் சிறப்பைக் கேள்விப்பட்டுத் தம் மன்னனிடம் கூறினர்.

செவியுற்ற சோழன் கௌசிகபுரத்திற்குவந்தான். கௌசிக நதியில் நீராடி, காலகாலேசருக்கு முறைப்படி வழிபாடு செய்து, திருப்பணிகள் செய்ய அனுமதி வேண்டி இறைஞ்சினான். இத்தலத்தில் தன் பெயரில் சிவலிங்கம் ஒன்றை நிறுவி வழிபட்டுத் திருப்பணிகளைத் தொடங்கினான். காலகாலேசருக்குக் கற்றளி அமைக்கத்திட்டமிட்டுச் சிற்பிகளை நியமித்தான். இறைவன் சந்நிதி, கருணாகரவல்லி, கற்பக விநாயகர், முருகப் பெருமான் ஆகியோருக்குத் தனித்தனிச் சந்நிதிகள் கட்டுமாறும், அம்மையப்பருக்கு நடுவே ஆறுமுகப்பெருமான் இருக்குமாறு சோமாஸ்கந்தராய் அமைக்குமாறும் பணித்தான். ஆடல்வல்லான், பரிவார தேவதைகள், மடைப்பள்ளி, மண்டபங்கள் முதலிய எல்லாம் ஆகம சாத்திரம் வழுவாமல் ஏற்படுத்த ஆணையிட்டான். ஆலயத்திற்குள் கரிவரதராசப் பெருமாளையும் எழுந்தருளச் செய்யச் சொன்னான். காளியம்மனுக்கும் தனிக்கோவில் கட்டப்பணித்தான். சிற்பிகள் அவ்வாறே காலகாலேசுரருக்கும், காளி அம்மனுக்கும் தனித்தனியே அழகிய ஆலயங்களைக் கட்டினர். அவர்கள் திருப்பணிகளைச் செய்துகொண்டிருக்கும்போதே, நாள் சிறப்பு வழிபாடுகளுக்கு வேண்டிய

ஏற்பாடுகளைக் குறைவில்லாமல் செய்து, தேவையான பணியாளர்களையும் நிதி ஆதாரங்களையும் அமர்த்தினான். ஆலயக் கட்டுமானப் பணிகள் யாவும் நிறைவேறியதும் மிகச் சிறப்பாகத் திருக்குடமுழுக்குச் செய்தான். காலகாலேசர் கரிகாலனுக்குக் கண்ணெதிரே காட்சியளித்துக் களிப்பித்தார்.

அடுத்து, ஆலயவழிபாடுகள் எந்நாளும் முறையாக நடைபெறுவதற்காகக் கரிகாற்சோழன் அந்த இடத்தில் ஒரு நகரத்தை நிர்மாணித்தான். கோயிலுக்காக எழுந்த நகர் என்பதால் கோயில்பாளையம் எனப் பெயரிட்டான். பிறகு தன் நகரத்திற்குத் திரும்பிச் சென்றான். அந்தக் கோயில்பாளையம் நாளுக்கு நாள் நல்ல வளர்ச்சிபெற்று இன்றும் நல்ல சிறப்போடு விளங்குகிறது.

கோயில்பாளையம் என்னும்

# கௌசைத் தல புராணம்

## 1. பாயிரம்

(கற்பக விநாயகர் துதி,)

(கலித்துறை)

திருவ ளம்பொலி கோயிற்பா ளையமெய்க்கௌ சிகப்பேர்
வருவ ளம்பொலி தலபுரா ணத்தினை வழுத்தப்
பெருவ ளம்பொலி கற்பக விநாயகர் பிரச
மருவ ளம்பொலி தாள்மலர் மனமுடி வைப்பாம். (1)

*(பொழிப்புரை) தெய்வீகச் சிறப்புப் பொருந்திய கோவில்பாளையம் என வழங்கப் பெறுவதும், கௌசிகபுரம் எனப் புகழ் பெற்றுள்ளதுமாகிய தலத்தினுடைய வரலாற்றைக் கூற மிக்க மாண்பினையுடைய கற்பக விநாயகரின் தேன் நிறைந்து நறுமணமாகிய செல்வம் விளங்குகின்ற திருவடித் தாமரைகளை உள்ளத்திலும் தலையின் மீதும் கொள்வாம்.*

*கௌசிக முனிவர் என்னும் விசுவாமித்திரரின் பெயரால் இந்தத் தலம் கௌசிகபுரி எனப்படுகிறது. இங்கு தலவிநாயகரின் பெயர் கற்பக விநாயகர்.*

(கொச்சகக் கலிப்பா - திரிபு)

(கலித்துறை)

அற்பகவி னாயகத்தேன் அரும்புலமைப் பெரியோர்தம்
சொற்பகவி னாயகத்தில் துணிபணியில் தோய்ந்தனன் நீ
முற்பகவி னாய கதை முடிக்கவிடை ஈந்தருள்வாய்
கற்பகவி னாயகப்பேர் கவின்றநலம் கண்டிடவே. (2)

*(பொழிப்புரை) அன்பு விளங்காததும் நாய் போன்று இழிவு மிக்கதும் ஆகிய உள்ளத்தினனாகிய அடியேன் பெறுதற்கரிய புலமையைப் பெற்றுள்ள பெரியவர்களுடைய சொல்லாகிய (கௌசிக புரியின்) பெரும்புகழைக் கேள்வியுற்று, அதற்குள்ளே துணிவோடு ஈடுபடுகின்ற காரியத்தில் முனைகிறேன். தேவரீர் முந்தைய காலப்பகுதியில் நிகழ்ந்த வரலாறுகளைக் கூறிப் புராணத்தை நிறைவேற்றும்படி உம்முடைய கற்பக விநாயகர் என்னும் பெயர் பொருட் சிறப்புப் பெறுமாறு அருள்புரிவீராக.*

*அற்ப அகவு இல் நாய் அகத்தேன். அகவு இல் – நடம் புரியாத, சிறந்து விளங்காத என்றபடி. சொல்பகம் வினாய் அகத்தில் – வார்த்தைகளாகிய கீர்த்தியைச் செவியுற்று அப்பொருளில். முற்பகவின் ஆய கதை – முந்தைய காலப்பகுதியின் வரலாறு. கற்பகம் வேண்டியவர் வேண்டியதை வழங்குவதைப் போல அப்பெயர் பெற்ற தேவரீரும் அடியேனுக்கு இப் புராணத்தை இயற்ற அருள்புரிய வேண்டும் என்பது கருத்து.*

### காலகாலேசர் துதி

*(கலித்துறை)*

போற்று தென்திசைக் காலன்நின் சந்நிதி புரிந்துன்
மாற்று யர்ந்தபேர் அருள்திரு உருப்பெற வயக்கி,
ஆற்று பூசையின் சிறப்பும், பின் ஆம்செயல் அனைத்தும்
சாற்று காலகா லேச!என் நாவினில் தழைத்தே. (3)

*(பொழிப்புரை) தென் திசைப் பாலகனாகிய இயமன் தேவரீருடைய திருக்கோவிலை உண்டாக்கியும், சிறந்த சிவலிங்கத் திருமேனியை அமைத்தும் வழிபட்ட பெருமையையும், அதற்குப் பிறகு நிகழ்ந்த செயல்களையும் காலகாலேசப் பெருமானே அடியேனின் நாவிலிருந்து நீங்களே கூறியருள வேண்டும்.*

### கருணாகரவல்லி துதி

*(அறுசீர் விருத்தம்)*

என்னை இறப்புப் பிறப்பெனும்நோய்
எய்தா வண்ணம் எடுத்தருளால்
பொன்னை நிகர்தாள் துணைமருந்து
புசிப்பான் அளிக்கக் கௌசையினில்
மின்னை நிகர்சிற் றிடைகமம்சூல்
மேகம் நிகர்மெய் விழிகொண்ட
அன்னை கருணா கரவல்லி
அடித்தா மரைகள் முடிக்கணிவாம். (4)

*(பொழிப்புரை) அடியேனைச் சனன மரணங்கள் என்னும் நோய் அணுகாதபடி அருளால் ஆட்கொண்டு, தேவரீருடைய பொன்னார் திருவடித் துணை என்னும் மருந்தை வழங்கவேண்டி கோவில்பாளையத்தில் எழுந்தருளியுள்ளவரும் மின்னலைப் போன்ற சிற்றிடையையும் நிறைவான சூலுற்ற மேகத்தைப்போன்ற திருமேனியின் நிறத்தையும், அந்த மேகம்போல் அருள் மழை பொழிகின்ற கண்களையும் பெற்றுள்ளதாயும் ஆம் கருணாகர வல்லியின் பாததாமரைகளைத் தலையில் சூடுவேன்.*

*தாள்(த்)துணை என்னும் தொடர் இரட்டுற மொழிதலாக இரு திருவடிகள் என்றும், திருவடிகளாகிய துணை என்றும் இரு பொருள் தந்துநின்றது. மேகம் அன்னையின் திருமேனிக்கு உரு உவமமும், கண் அருள் பொழிவதற்குப் பயன் உவமமும் ஆகும்.*

## *நடராஜர் துதி*

*(கலித்துறை)*

புடம்பு ரிந்தபொன் அணிக்கவு சிகபுரிப் பொதுவில்
நடம்பு ரிந்தருள் நாத! என் நெஞ்சின்மெஞ் ஞானத்
திடம்பு ரிந்திடும் சிவகாமி யோடுநீ சேர்தற்கு
இடம்பு ரிந்திட வேண்டும்நின் திருஉளம் இசைந்தே (5)

*(பொழிப்புரை) புடமிட்ட பொன்னைப் போல் சிறப்புப் பொருந்தி* கோவில் பாளையத்தின் அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் தலைவரே! அடியேனுடைய மனத்தின்கண் மெய்யறிவின் ஊக்கத்தை உண்டாக்கும் சிவகாமித் தாயாரோடு தேவரீர் பொருந்துவதற்குப் பெரியமனது வைத்து இடத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும்.

*உயிர்களின் உய்விற்காகவே அன்னை சிவகாமி எப்போதும் நடன தரிசனம்செய்து கொண்டிருக்கிறாள் என்பது சித்தாந்தம்.*

*என் உள்ளத்தில் காமம், சினம் முதலிய தீய பண்புகள் நிறைந்துள்ளன. எனினும் தேவரீர் அந்த இழி குணங்களை நீக்கித் தாங்கள் எழுந்தருளத் தக்க இடமாகச் செய்துகொண்டு எழுந்தருள வேண்டும் என்பது கருத்து.*

### சண்முகக் கடவுள் துதி

*(அறுசீர் விருத்தம்)*

புண்முகந் திட்ட ஆக்கை புலத்துளை புக்கு நாடிப்
பெண்முகந் திட்ட போகப் பிழையினுள் குழைவு றாதென்
கண்முகம் தழைத்த பேறு காட்டிடக் கௌசை மேய
சண்முகப் பெம்மான் செம்பொற் சரணமே சரணம்; அம்மா!

*(பொழிப்புரை) புலால் நாறுகின்ற உடம்பிலுள்ள ஐம்புலன்களாகிய தொளைகளால் தேடி, மகளிரை அள்ளித் துய்ப்பது ஆகிய காமப் புன்னெறியில் அடியேன் வாடாமல் என்பால் மெய்இன்பத்தால் முகம் மலர்தலாகிய பேற்றினை வழங்குவதற்குக் கௌசிகபுரியின் ஆறுமுகப் பெருமானின் செம்மையான அழகிய திருவடிகளே புகலிடம் ஆகும். அம்மா – ஈற்றசை.*

*என் கண்ணும் முகமும் தழைத்த எனக் கொண்டு விழிகளும் முகமும் மலர்தலாகிய எனினும் ஆம்.*

## தட்சிணாமூர்த்தி துதி

*(கலித்துறை)*

தன்னை ஓர்ந்தமை காலத்தில் தன்னுளே மறைந்து
பின்னை ஓர்ந்திசை காலத்தில் தான்அறப் பெயர்த்து
முன்னை ஒத்திசை தரப்புரி தட்சிணா மூர்த்தி
பொன்னை ஒத்ததாள் பணிந்துவெம் பவம்அறப் புரிவாம். (7)

*(பொழிப்புரை) ஓர் உயிர் தன்னையே பெரிதாகக் கருதியுள்ள போது (தற்போத நிலையில்) அந்த உயிருக்குள்ளேயே மறைந்து நின்று பிறகு இறைவனை உணர்ந்து பொருந்தியபோது ஆணவத்தை நீக்கித் தான் மறைவதற்கு முன்னால் விளங்கியிருந்ததைப் போல விளக்கமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்ற தென்முகக் கடவுளின் பொன்னார் திருவடிகளை வணங்கிக் கொடிய பிறவி நோயிலிருந்து விடுபடுவோமாக.*

*ஆன்மபோதம் அழிந்தவழிச் சிவபோகம் விளையும் என்பதுவும் இது குருநாதரின் திருவருளாலேயே நிகழும் என்பதுவும் சித்தாந்தம். "தந்தது உன்றன்னை; கொண்டது என்றன்னை" (திருவாசகம்) "என்னை எடுத்து விழுங்கி எனக்கே தன்னை அளித்தருள் தத்துவ நாதன்" (இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி 42) என்பனவற்றால் இக் கருத்தை உணரலாம்.*

## கரிவரதராசர் துதி

*(அறுசீர் விருத்தம்)*

திணிக்கருங் கல்ஒப் பாம்என் சிந்தையை வெதுப்பும் மாயைப்
பிணிக்கருங் கோடை முற்றும் பெயர்ந்தொழிந் தறவே பெய்யும்
மணிக்கருங் கொண்டல் ஆகி வளர்புகழ்க் கௌசை மேய
கணிக்கருங் கருணை மேனி கரிவர தன்தாள் போற்றி (8)

*(பொழிப்புரை) வலிமையான கருங்கல்லைப் போன்ற அடியேனின் உள்ளத்தை வருத்துகின்ற மாயா மலத்தின் சுட்டு என்னும் கொடுமையான வேனிற்காலம் முழுவதும் நீங்கி ஒழியுமாறு பொழிகின்ற அழகிய கரிய மேகத்தைப் போல நாளுக்கு நாள் மிகுகின்ற புகழைப் பெற்ற கோவில்பாளையத்தில் கோவில் கொண்டவராகி எல்லை காண முடியாத பெருங்கருணையே வடிவமாகிய கரிவரதராசப் பெருமாளின் திருவடிகளுக்கு வணக்கம் செய்வோம்.*

*மாயையின் பிணிப்பு ஆகிய கோடைக்காலம் என உருவகம். அது ஒழியுமாறு (அருள்) மழை பொழியும் மேகம் போன்றது திருமாலின் நிறம்.*

*கோடை அறவே பெய்யும் கொண்டல் ஆகி வளர் மேனிக் கௌசைமேய கணிக்கரும் கருணைக் கரிவரதன் தாள் போற்றி எனப் பொருள்முடிபு காண்க.*

### கலைமகள் துதி

*(வேறு)*

மலைமகள்ஆம் உமை கருணா கரவல்லி
ஆம்கௌசை வளப்ப திப்பால்
அலைமகள்ஆம் உன்மாமி அமைக்கும் இன்பம்
அத்தனையும் அடியேன் நாவில்
நிலைமகள்ஆய் நீ இருந்து முன்புகுந்த
சரிதம்உடன் நிகழ்த்தல் வேண்டும்;
கலைமகளே! எனதுசுதந் திரம்முழுதும்
கருணையினால் கைக்கொண் டாயே. (9)

*(பொழிப்புரை) இமவானின் புதல்வியாகிய பார்வதி கருணாகர வல்லி என்னும் திருநாமத்தோடு விளங்கும் கௌசை ஆகிய செழிப்பு மிக்க தலத்தின்கண் பாற்கடலில் தோன்றியவளும் உம் மாமியாரும் ஆகிய இலக்குமிதேவி உண்டாக்குகின்ற மகிழ்ச்சிகள் எல்லாவற்றையும் எளியேனுடைய நாக்கில் நிலைத்திருந்து (அத்தலத்தில்) முற்காலத்தில் நிகழ்ந்த வரலாறுகளோடு இயற்றவேண்டும். சரசுவதியே! அடியேனின் தற்போதத்தை நீங்கள் உங்கள் பேரிரக்கத்தால் ஏற்கெனவே உம்முடையதாக ஆக்கிக்கொண்டுவிட்டீர் அன்றோ?*

*எனக்கு என்று எந்தச் செயலும் இல்லை; என்னுடைய இயக்கம் எல்லாமும் திருவருள் இயக்கமே என்பது கருத்து.*

### கௌசைக் காளி

*(வேறு)*

பாப்பணி புனையும் இன்பப் பரன்கால காலே சன்சீர்ப்
பாப்பணி புனைவேன் உள்ளம் பதிந்தருட் பார்வை ஈவாய்
காப்பணி பெறுமா றென்றும் கௌசையம் பதியில் மேவும்
காப்பணிக் கைகொண் டோங்கும் காளி! நின் உளம்உ வந்தே.

*(பொழிப்புரை) ஊரின் பாதுகாப்பு சிறப்புறுமாறு எந்நாளும் கோவில் பாளையத்தில் எழுந்தருளியுள்ளவளும், கங்கணங்களை உடைய அழகிய கரங்களைப் பெற்றவளும் ஆகிய காளிதேவியே! பாம்புகளாகிய அணிகலன்களை அணிபவரும், ஆனந்தமயமானவரும், பரம்பொருளுமாகிய காலகாலேசப் பெருமானின் புகழைப் பாடுகின்ற தொண்டினை ஏற்றுள்ள அடியேனின் சிந்தையில் நிறைந்திருந்து நீ உள்ளம் இரங்கி அருட்பார்வை வழங்கியருள்வாய்.*

*பாப்பு அணி– சர்ப்பாபரணம். பா பணி – பாவைப் பாடும் தொண்டு, இரண்டன் உருபும் பொருளும் உடன் தொக்க தொகை. காப்பு அணி பெறுமாறு – காவல் சிறக்க. காப்பு – கங்கணம். அணிக்கை – அழகிய கை.*

*சற்குரு துதி*

*(வேறு)*

மறப்பும் நினைப்பும் தோற்றுவித்து
வாட்டும் கொடும் மும் மலம்பொருத்தும்
இறப்பும் உதிப்பும் அகற்ற அருள்
இராமா னந்தப் பெயர் அமைந்த
சிறப்புத் திருமே னியில்பொருந்திச்
சிறியேன் காண வந்த அருள்
நிறப்புத் தலர்ச்சே வடிஇணைஎன்
நெஞ்சில் சிரத்தில் நின்றிடுமே. (11)

*(பொழிப்புரை) மறதியையும் நினைவையும் உண்டாக்கி வருத்துகின்ற கொடுமை மிக்க மூன்று மலங்களால் ஏற்படும் பிறப்பு இறப்புக்களை நீக்குவதற்காக திருவருட் சிறப்பு மிக்க இராமானந்த சுவாமிகள் என்னும் திருநாமம் பொருந்திய (கௌமாரத் தொண்டர்களுக்குச்) சிறப்புரிமை வாய்ந்த வடிவத்தை ஏற்று அடியேனின் எதிரே எழுந்தருளியுள்ளதும் அருள் ஒளி வீசுவதும், அன்றலர்ந்த மலரைப் போன்றனவுமாகிய திருவடிகள் எளியேனின் உள்ளத்திலும் தலையின்மீதும் எப்போதும் நிலைத்திருக்கும்.*

*அவையடக்கம்*

*(எழுசீர் விருத்தம்)*

சுவைபொலி அமுத புஞ்சம்என் மழலைச்
சொற்கரு ணாகர வல்லிச்
சிவைபொலி வாமக் காலகா லேசன்
திருத்தொண்டர் பாற்புரி இன்பக்
குவைபொலி ஆடல் வளம்பெரி யோர்க்குக்
கொடுக்கும்; என் புன்மொழிப் பாடல்
நவைபொலி சிறியோர்க் கவர்மன விருப்பு
நல்கும்கற் பகத்தினில் நயந்தே. (12)

*(பொழிப்புரை) சுவை மிக்க அமுதத்தைப் போலவும், மழலைச் சொற்களைப் போலவும் இனிமை வாய்ந்த வார்த்தைகளை மிழற்றும் கருணாகர வல்லி என்னும் உமாதேவியார் பொருந்திய இடப்பாகத்தை உடைய காலகாலேசப் பெருமான் தன் அடியார் மாட்டுச் செய்கின்ற இன்பம் மிக்க அருளாடல் சான்றோர்களுக்கு உவகையை அளிக்கும். எளியேனின் இழிந்த செய்யுள்கள் குற்றங்கள் நிரம்பிய சிறியவர்கள்விரும்புகின்ற குற்றங்களை அவர்களுக்குக் கற்பக மரம் போல விரும்பிக் கொடுக்கும்.*

*பெரியோர்கள் இறையருளில் ஆழ்வர்; அதனை இந்நூலில் கூறப்படுகின்ற அருளாடல்கள் வழங்கும். சிறியோர் எதிலும் குற்றமே கண்டு மகிழ்வர்; அத்தகையோருக்கு என் நயமற்ற பாடல்கள் நிறைய வழுக்களைக் காட்டா நிற்கும் என்பது கருத்து.*

சான்றவர் யாரும் யான்பொருந் திச்சை
தவத்தினால் வந்ததென் றென்னை
ஏன்றவர் ஆகி இன்னம்மேன் மேலும்
ஏற்றிடற் கெண்ணுவர்; என்னைப்
போன்றவர் தம்பாட் டினும்குறை கூறப்
புகுவன்என் றென்னை அஞ் சுவர்; கீழ்த்
தோன்றவர் குற்றம் பொறுத்தல்என் கடன்; மேல்
சொல்லுவ தெவர்க்கவை யடக்கம்? (13)

*(பொழிப்புரை) சான்றோர்கள் எல்லோரும் எனக்கு இறைவனைப் பாட வேண்டும் என்னும் அவா தவத்தின் பயனாக ஏற்பட்டது என்று கருதி, என்னோடு கூடியவராகி, என் இச்சையை மேலும் மேலும் வளர்க்க நினைப்பார்கள் எனக்குச் சமமான புலமை உடையவர்கள் என் பாடலில் குற்றம் கண்டு கூறினால் நானும் அவர்களுடைய படைப்புகளில் குற்றம் கூறுவேன் என அச்சம் கொண்டு சும்மா இருப்பார்கள். என்னைவிடத் தாழ்ந்த நிலையில் உள்ள புலவர்கள் ஏதாவது குறை சொன்னால் அதைப் பொருட்படுத்தாமல் விட்டுவிட வேண்டியது என் கடமை. இந்த நிலையில் யாருக்காக நான் அவையடக்கமாகிய பணிவுச் சொற்களைக் கூற வேண்டும்? தேவை இல்லை என்றவாறு.*

*ஏன்றவர் – பொருந்தியவர். ஏற்றிடற்கு – தவநிலையில் உயர்த்துவதற்கு. கீழ்த்தோன்று அவர்.*

*பாயிரம் முற்றிற்று*

## 2. நாட்டுப் படலம்

*(அறுசீர் விருத்தம்)*

14. பாட்டுச் சிறப்புப் பொலிதொண்டர்
பலர்க்கும் சித்திப் பயனொடியல்
வீட்டுச் சிறப்பும் தரும்பரமன்
விளங்கும் மகிமை மிகுகொங்கு
நாட்டுச் சிறப்புள் உயர்பத்தி
ஞானச் சிறப்பு நல்குவிளை
யாட்டுச் சிறப்பு முதற்சிறிதீண்டு
அறிஞர் முறைவ ழாதறைவாம். (1)

*(பொழிப்புரை) பாடும் பணியால் சிறப்பு மிக்க அடியார்கள் பலருக்கும் எண்வகைச் சித்திகளோடு மேலான முத்தியையும் வழங்குகின்றவராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள பெருமை சான்ற கொங்கு நாட்டின் தலங்களில் உயர்ந்ததாகிய பக்தி ஞானங்களின் மேன்மையைக் காட்டுகின்றனவாகிய திருவிளையாடல்களின் உயர்வு முதலியவற்றை இப்போது கவிமரபு மாறாத வண்ணம் கொஞ்சம் கூறுவோம்.*

*(வேறு)*

15. முழுதுணர் புலவ னான முருகவேள் அமரர் வேண்டப்
பழுதுறும் அசுரர்ச் செற்ற பவநினைந் திரங்கி அன்பால்
மழுஅணி கரத்தெம் பெம்மான் மலர்அடி அருச்சித் தேத்தும்
செழுமைகாண் முருகன் பூண்டி திகழ்வது கொங்கு நாடு. (2)

*(பொழிப்புரை) முற்றறிவினராகிய முருகப் பெருமான் தேவர்களின் வேண்டுகோளை ஏற்றுத் தீய அரக்கர்களைக் கொன்றதால் நேர்ந்த பாவத்திற்காக வருந்தி, சிவபெருமானின் திருவடிகளைப் பக்தியோடு வணங்கிப் போற்றிய தலமாகிய திருமுருகன் பூண்டி இருப்பது கொங்கு நாடு ஆகும்.*

16. சூரன்ஓர் தங்கை ஆகித் துலங்கச முகிதூர் வாசப்
பேர் அருள் முனியைக் கூடிப் பெற்றவில் வலன்வா தாவிக்
கோரரை அட்ட பாவம் குறுமுனி அகற்ற இன்பால்
சாரம்ஆர் பூசை ஆற்றும் தலத்தது கொங்கு நாடு. (3)

*(பொழிப்புரை) சூரபதுமனின் ஒரே தங்கை அசமுகிக்குத் தூர்வாச முனிவர் வழிப் பிறந்த மைந்தர்கள் ஆகிய வில்வலன், வாதாபி என்னும் கொடியவர் இருவரையும் கொன்ற பாவம் நீங்குவதற்காக, அகத்திய முனிவர் சிவபிரானைப் பூசித்த தலம் கொங்கு நாட்டது ஆகும்.*

*கந்த புராணம் இக் காரணத்திற்காக அகத்தியர் வழிபட்டதை "ஆசு இல் கொங்கினுக்கு அணித்தின் ஓர் இடை வாசம் ஈது என மகிழ்ந்து வீற்றிரீஇ ஈசனார் தமை இலிங்க மேனியில் நேச நெஞ்சினான் நினைந்து தாபித்தான்" (2–27–6) எனத் தலப்பெயர் சுட்டாமல் கூறுகிறது. இந்தத் தலம் துடியலூர் என்று துடிசைப் புராணம் இயம்புகிறது. "துன்நெறி அசுரரைத் தொலைத்த பாவமே மன்னிய தமிழ் முனி மருங்கில் தோன்றலால் அன்னவன் இறைவனை அமர்ந்து போற்றவே"."தவநெறி இடைவிடாச் சரத மாமுனி பவம் அறு துடிசையம் பதிபுக் காங்கமர் சிவபெருமானையும் தேவி தன்னையும் உவகையினொடுதொழு தொருங்குற் றான் அரோ". (அகத்திய பூசைச் சருக்கம் 17, 18)*

17. பரம்மரு விடச்செய் ஞானப் பாலறா வாயன் இன்ப
வரம்மரு வியமெய்த் தொண்டர் வாழ்த்திடத் திருச்செங் கோட்டுப்
புரம்மரு வியகால் ஆண்டுப் பொருந்திய சீத வாதச்
சுரம்மரு விடாது பாடத் தோய்ந்தது கொங்கு நாடு. (4)

*(பொழிப்புரை) பரம்பொருளை அடைவிக்கின்ற மெய்யறிவைப் புகட்டுகின்றவராகிய திருஞானசம்பந்தர் உவகையையும் மேன்மையையும் பெற்றிருந்த தம் அடியார்கள் போற்றும்படித் திருச்செங்கோட்டுப் பதியில் இருந்த காலத்தில் அவ்வூரில் ஏற்பட்ட நளிர் சுரத்தை இல்லாமல் நீங்குமாறு "அவ்வினைக் கிவ்வினை" எனத் தொடங்கும் தேவாரப் பதிகம் பாடப் பெற்ற பெருமையை உடையது கொங்கு நாடு.*

18. பரவுசீர்ச் சேரன் ஆரூர்ப் பாவலற் கீகை முற்றும்
கரவுறக் கணத்தால் கொண்டு கவிதைகேட் டீந்த பூண்டி
வரம்உறு முதலை உண்ட மதலைஆ ரூரர் பாவால்
விரவுபுக் கொளியூர் கொண்டு விளங்கிசைக் கொங்கு நாடு (5)

*(பொழிப்புரை) போற்றுதலுக்குரிய சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரருக்கு வழங்கிய செல்வம் அனைத்தையும் சிவகணங்களை விட்டு வழிப்பறி செய்து, அதற்குப் பிறகு அவருடைய தேவாரப் பதிகத்தைக் கேட்டுப் பறித்ததைத் திரும்ப அளித்த பதியாகிய திருமுருகன் பூண்டியையும், ஆரூரர் முதலை உண்ட பிள்ளையை மீட்ட திருப்புக்கொளியூர் அவிநாசியையும் தன்னகத்தே கொண்டது கொங்கு நாடாகும்.*

*ஒரு முறை இறந்து, பின் தேவாரப் பாசுரத்தால் உயிர்பெற்று, தான் விழுங்கிய மதலையை உமிழ்ந்த சிறப்பு நோக்கி வரம் உறு (மேன்மை பொருந்திய) முதலை என்றார்.*

19. அரன்உமை பள்ளன் பள்ளி ஆகிநெல் வித்தி ஆரூர்ப்
புரவலர் காண நட்டம் புரிந்துதில் லையினும் போற்றும்
வரம்அளித் துதிப்பி றப்பில் மாண்பனை புளிகொண் டோங்கும்
உரம்மிகும் பேரூர் தன்கண் உறத்திகழ் கொங்கு நாடு. (6)

*(பொழிப்புரை) பட்டீசரும் மரகதவல்லியும் பள்ளனும் பள்ளியுமாக உருமாறி, ஆரூரருக்காக, வயலில் நெல் விதைத்துத் திருவிளையாடல் செய்து அவரால் சிதம்பரத்துப் பதிகத்திலும் போற்றப் பெற்றதோடு, இறவாப்பனை பிறவாப்புளி ஆகிய இரு மரங்களால் இத்தலம் பிறப்பிறப்பை அழிக்கக் கூடியது என உணர்த்துகின்ற வல்லமை மிக்க பேரூரைத் தன்பால் பெற்றுள்ளது கொங்கு நாடு.*

*சுந்தரர் தில்லைப் பதியில் பேரூரைப் போற்றியது "பாரூரும் அரவு" எனத் தொடங்கும் பதிகத்தில் (தேவாரம் 7–90–10). தில்லையினும் என்புழி உயர்வு சிறப்பும்மை.*

20. நீற்றிடம்; பவம்இ றப்பை நீற்றிடம்; சேரன் ஆட்சி
ஆற்றிடம்; புகுந்தோர் நெஞ்சம் ஆற்றிடம்; ஆய்உ லாவைச்
சாற்றிடம் ஆகி இன்பம் தரும் அரங்கென்னக் கைலை
ஏற்றிட அமைக்கும் மாட்சி ஏற்றம் ஆர் கொங்கு நாடு (7)

*(பொழிப்புரை) ஆராயத் தக்கதாகிய திருக் கைலாய ஞான உலாவைச் சேரமான் பெருமாள் இயற்றிய நிலப்பகுதி ஆக மகிழ்ச்சி அளித்து, அவரைக் கயிலை மலையில் ஏற வைத்த சிறப்பினைப் பெற்றுள்ள கொங்கு நாடு திருநீறு நிறைந்த பகுதியும், சனன மரணங்களை ஒழிக்கும் பகுதியும், சேர மன்னன் ஆண்ட பகுதியும், தன்பால் வந்தடைந்தவர்களின் மனக் கவலையை மாற்றும் பகுதியும் ஆகும்.*

*நீற்றிடம் என்றது சைவ சமயம் செழித்துள்ள நாடு என்னும் கருத்தில்.*

21. அயர்வு முன் தான்தீர்ந் தின்பம் அடைந்திடல் உன்னி யோ?வெம்
துயர்கெட அருள்வான் அன்புள் துளும்பியோ? தேரேன்; கும்பன்
உயர்புகழ் முருக வேள்முன் உரைத்தலின் இராமா னந்தப்
பெயர்கொடு மீண்டும் எய்தப் பெற்றது கொங்கு நாடு. (8)

*(பொழிப்புரை) வாதாவி வில்வலன் ஆகிய அரக்கர்களைக் கொன்ற பாவம் தொலைந்து தான் மகிழ்ச்சியடைந்த இடம் எனக் கருதியோ? அல்லது மக்களின் கொடிய துன்பத்தைப் போக்க அருள வேண்டும் என்னும் கருணைப் பெருக்கத்தாலோ? அடியேன் அறியேன். முருகப் பெருமானின் அருளுரைப்படி சிரவை இராமானந்த சுவாமிகள் என்னும் திருப்பெயரோடு அகத்தியர் மறுபடியும் அவதரித்த பெருமையை உடையது கொங்கு நாடு.*

*இராமானந்த சுவாமிகளின் பெற்றோர் ஒரு தைப்பூசத்தில் இரத்தினாசல முருகப் பெருமானை வழிபட்டு, ஆண் மகவு வேண்டி இரந்தபோது, பெருமான் ஒரு தவசியின் வடிவத்தில் தோன்றித் திருநீறளித்து, அகத்தியரின் அம்சமாக உங்களுக்கு ஒரு மைந்தன் பிறப்பான் என்று அருளுரை வழங்கியதாக வரலாறு. இச் செய்தியை இந்தப் புராண ஆசிரியரே தம் இராமானந்த சுவாமிகள் சரித்திர சார வண்ணத்தில் பின்வருமாறு கூறியுள்ளார் :-*

*முருகோன் நேர், "மனதுள ஓர் குறை தீராய்" என்று உளம் உருகும் அவேளையிலே, தேசு ஒன்றிய வடிவுடை ஓர்தவன் நேரா வந்து அருளாலே வதிபவர் யாரையும் நாடாது அங்கு இவர் முனம் உறுபோது அதிதாழ்வா நின்று தம் வகை சொலலான் மகிழ்வாய் நீடு அன்புடன் எழிலே தோய் மடிஉற நீறு அளியா, "நும்தமுள்உறு துயர் ஓவுமின்; வேலோன் நன்கடை மருவுவிர் ஆதலினாலே உம் பெருவிழைவே போல் மலய குலாசல மேல் வாழும் குறுமுனியினது ஓர் கலை தானே இம்பரின் மகவு எனவே வரல் தேர்வீர்" என்றுபின் அருவானான் (கலை 18-22)*

22. பருவரல் உற்ற மற்றைப் பதியில்நின் றடைந்தார்க் கெல்லாம்
திருவருள் உதவும் பெட்பால், சிவன்நுதல் விழிக்கு லம்சால்
பொருவரு சேரன் ஆட்சி பொருந்தலால் கருணைச் சீலக்
குருபரன் நிகர்ப்ப தம்மா! கோதில்சீர்க் கொங்கு நாடு. (9)

*(பொழிப்புரை) பிற நாடுகளிலிருந்து வருந்தி வந்து தன்பால் அடைந்தவர்கள் அனைவருக்கும் நலம்புரியும் சிறப்பினாலும், சிவபெருமானின் நெற்றிக்கண் ஆகிய அக்கினியின் மரபில் உதித்த இணையற்ற சேரமன்னர்களால் ஆளப்படுவதாலும் இந்தக் கொங்கு நாடு கருணை மிக்க ஞானதேசிகரை நிகர்ப்பதாகும்.*

*தன்னைச் தஞ்சமடைந்தவரைக் காப்பது சற்குருநாதன் இயல்பு. சிவபெருமானின் நெற்றிக்கண்ணில் பிறந்த முருகப் பெருமான் குருத்துவத்தின் முழுமையான வடிவம் என்பது கௌமார சித்தாந்தம். "குரு எல்லாம் சுப்ரமணியக் கொழுந்தே ஆகும்" என்பார் வண்ணச்சரபா். தன்பால் பொருந்தும் பொருள்களைத் தூய்மையாக்கும் அக்கினி மரபின் அரசரால் ஆளப்பட்டதால் குருவைப் போன்றதாயிற்று.*

*சேர மன்னர்களை அக்கினிவம்சத்தார் எனல் பிற்காலத் தமிழ் இலக்கிய மரபு. திருப்பேரூர்ப் புராணம் இக் கருத்தை,*

"பரிதியொடு வெண்மதி பரிக்கஒளி நல்கும்
உருகெழு கனற்புதல்வன் ஆண்டஒரு சீரால்
இரு சுடர் உயிர்த்தவர்கள் ஆண்ட இரு நாட்டின்
குரு என விளங்கியது கொங்கு வள நாடு" (நாட்டுப் படலம் 3)

*என விளக்குகிறது.*

*(கலித்துறை)*

23. திருந்தும் ஈகைஇல் வன்குணன் பெற்றசெல் வம்போல்
வருந்து தாகம்ஆற் றாப்புனல் மலிந்துவான் மகரம்
பொருந்து நாற்றம்மிக் குவர்த்திடும் கடல்நிலம் போக்கி
விருந்து மெய்விழிக் களிக்கும்முந் நிலம்கொடு விரவும். (10)

*(பொழிப்புரை) திருத்தமான கொடைத்தன்மை இல்லாத உலோபி பெற்றுள்ள பொருள் வளத்தைப் போல நீர் விடாயால் தவிப்பவர்களின் தாகத்தைத் தணிக்காத உப்புத் தண்ணீர் நிறைந்தும், பெரிய முதலைகள் சேர்ந்து வாழ்வதால் கெட்ட வாசனை கொண்டும், சலிப்புத் தன்மையை ஏற்படுத்துகின்றதும் ஆகிய கடல் சார்ந்த நெய்தல்நிலத்தை ஒழித்து, உடலுக்கும் கண்களுக்கும் மகிழ்ச்சியூட்டுகின்றனவாகிய குறிஞ்சி, முல்லை, மருதம் என்னும் மூன்று திணைகளை மட்டும் கொண்டு விளங்குவது கொங்கு நாடு.*

*கொங்கு நாட்டின் இயற்கையமைப்பில் இல்லாத நெய்தல் நிலத்திற்குக் கவிஞர் தாமாகக் காரணம் ஒன்றைக் கற்பிப்பதால் இது ஏதுத்தற்குறிப்பேற்ற அணி.*

*குறிஞ்சி*

24. தோல்அ மைந்துமை இடங்கொடாற் றினைமுடி சூடி
ஆல்அ மைந்தணிப் பணியிருள் கந்தரம் அவிர்ந்து
பால்அ மைந்தஇந் தணிமுடி குமரன்தாள் பதித்து
மேல்அ மைந்தவெற் பினம் அரன் நிகர் என விளங்கும். (11)

*இது மலைக்கும் சிவபிரானுக்கும் சிலேடை.*

***மலைப்பகுதி :–*** *தோல் அமைந்து – மூங்கில்கள் நிறைந்து, யானை எனினும் ஆம். மை இடம் கொடு – தன் பால் (குகை முதலிய) இருண்ட இடங்களைப் பெற்று. ஆற்றினை முடி சூடி – ஒற்றையடிப் பாதைகளை தன் மேல் அமையப் பெற்று, அருவிகளை எனினும் ஆம் . ஆல் அமைந்து – கார்த்திகை நட்சத்திரம் தோயப் பெற்று, ஆல மரங்கள் எனினும் இழுக்கின்று. பணி அணி – பாம்புக் கூட்டங்களும். இருள் கந்தரம் அவிர்ந்து – இருண்ட மேகங்களால் சூழப் பெற்று. பால் அமைந்த இந்து அணி முடி வெற்பினம் – பால் போன்ற வெண்மையான சந்திரனை அணிந்த சிகரங்களை உடைய மலைக் கூட்டம். குமரன் தாள் பதித்து – குறிஞ்சிக் கடவுள் ஆகிய முருகக் கடவுளின் திருவடிகள் பதியப்பெற்று.*

***சிவபெருமான் பகுதி :–*** *தோல் அமைந்து – யானை, புலி ஆகிய விலங்குகளின் சருமம் ஆடையாகி. உமை இடம் கொடு – பார்வதியை இடப் பாகத்திலே ஏற்று. ஆற்றினை முடி சூடி – கங்கையைத் தலையில் அணிந்து.*

*ஆல் அமைந்து – கல்லால நீழலில் அமர்ந்து. அணிப் பணி இருள் கந்தரம் அவிர்ந்து – அணிகலன்களாகிய பாம்புகளையும் நீல கண்டத்தையும் பெற்று, பால் அமைந்த இந்து அணி முடி – பகுக்கப்பெற்ற சந்திரனாகிய பிறையை அணிகின்ற தலையில். குமரன் தாள் பதித்து – (தன் மைந்தனை எடுத்துக் கொஞ்சும்போது) முருகப் பெருமானின் திருவடிகள் தோயப்பெற்று.*

25. பொன்ன கர்க்கிடர் அறுக்கும்நம் இறைவனைப் போல்அம்
மன்ன வன்புரந் திடும்வயல் நிலம்வளம் மருவ
நன்ன திக்குலப் பெருக்கம்ஈந் தளிக்குதும் நாமும்
என்ன நல்வரைக் குலம்வரை யற்றசீர் இசைக்கும். (12)

*(பொழிப்புரை) தேவலோகத்திற்கு ஏற்படும் துன்பங்களை நீக்கும் நம் குறிஞ்சிக் கிழவனாகிய முருகவேளைப் போலவே அந்நாட்டுத் தலைவனாகிய இந்திரனால் பாதுகாக்கப் பெறும் மருதநிலத்து விளை நிலங்களில் செழிப்பு உண்டாக நல்ல ஆறுகளில் நாமும் வெள்ளப் பெருக்கை உண்டாக்குவோம் என்று கருதி மலைக் கூட்டங்கள் எல்லையற்ற செல்வங்களைத் தரும்.*

26. பைய ராவின முடிமணி யால்இருள் பாற்றி
மைய றாச்செழும் சோலையுள் வதிதரு மாட்சி
துய்ய கார்த்திகை உடுக்கள்போன் றிசைகள்யாம் தோயச்
செய்ய வேண்டும்என் றேனைமீன் தவம்செயல் சிவணும். (13)

*(பொழிப்புரை) படங்களைப் பெற்ற பாம்புக் கூட்டங்கள் தம் தலையிலுள்ள நாகமாணிக்கங்களின் ஒளியால் இருட்டைப் போக்கடித்து, மேகங்கள் நீங்காமல் படிந்துள்ள செழிப்பு மிக்க பொழில்களில் வசிக்கின்ற சிறப்பானது கார்த்திகை நாள் பெற்றுள்ள பெரும்புகழைத் தாமும் பெற வேண்டும் என்னும் விழைவால் மற்ற நட்சத்திரங்கள் அச் சோலையில் தவம் புரிவதைப் போலக் காட்சியளிக்கும்.*

27. “மகத்து வம்கொள்எம் மலைமுடிக் கடவுளை வாழ்த்திச்
சுகத்து வம்பெறும் அருணையூர் நாதனைத் துணைப்பச்
சகத்துள் ஆர்நரர் காள்!வந்து திருப்புகழ் சாற்றிக்
குகப்பி ரான்அருள் பெறும்”எனக் கூறும்அஞ் சுகங்கள். (14)

*(பொழிப்புரை) “மகிமை உடையவராகிய எம்முடைய மலையின் மேலுள்ள முருகக் கடவுளைப் போற்றி, அருணகிரி நாதர் இறைவனின் தோளில் அமரும் கிளியின் தன்மையாகிய பேரின்பத்தைப் பெற்றதைப் போன்று, உலக மக்களே! நீங்களும் வந்து திருப்புகழ் இசைத்து ஆறுமுகனின் அருளைப் பெறுவீராக” என்று அம்மலைகளில் உள்ள கிளிகள் கூறும்.*

*சுகத்துவம் – இரட்டுற மொழிதலாகக் கிளிஆம் தன்மை, பேரின்பம் என இருபொருளும் கொள்க.*

28. வரையில் வாழ்புகழ் பெற்றசீர்க் குருபரன் வனசக்
குரைக முற்றுணை ஆட்டியற் றருள்நலம் கொண்ட
வரையின் மாட்சிமை மிகமிக வழுத்தினும் இன்னம்
வரைதி என்னவான் அளக்கும்நம் புகல்இது வரையே. (15)

*(பொழிப்புரை) எல்லையற்றதும் நிலைத்ததுமான கீர்த்தியைப் பெற்று விளங்கும் குமரகுருபரப் பெருமானின் தாமரை போன்றனவும் தண்டைகள் ஒலிக்கின்றனவும் ஆகிய திருவடிகள் அருளாடல்கள் புரிகின்ற மலையின் பெருமையை எவ்வளவு கூறினாலும் மேலும்மேலும் எழுது என்று வானளாவ நிறைந்து நிற்கும். என்றாலும் மலையை அடைக்கலமாகக் கொண்ட எளியேன் கூற்று இவ்வளவே.*

*நம்புகல் இதுவரையே – இரட்டுற மொழிதல்.*
*1. நமக்கு அடைக்கலமாவது (முருகனுக்குரிய) இந்த மலையே.*
*2. நம்முடைய சொற்கள் இந்த அளவு மட்டுமே.*

29. மலைதிர் என்றிசைத் திடும்இயற் புலவரை மருட்டும்
நிலைப டைத்தவிர் குறிஞ்சிநன் நிலத்தயல் நிலவும்
தொலைவில் பல்வளம் மல்கியல் முல்லையின் தொகுசீர்
கலைவ லார்இனம் களிப்புறச் சிறிதிவண் கரைவாம். (16)

*(பொழிப்புரை) (புலமைக் காய்ச்சலால் தம் இனமாகிய பிற புலவர்களுடனேயே) போரிடுங்கள் எனக் கூறும் மொழி அறிஞர்களை (அது தகாது என அறிவுறுத்தி) இனிய சொற்களால் திருத்துகின்ற தன்மை பெற்றுள்ள (உள்ளத்தை விரியச் செய்கின்ற) குறிஞ்சிக்குப் பக்கத்திலே உள்ளதும், தீராத பல செழிப்புக்களைப் பெற்றிருப்பதுமாகிய முல்லை நிலத்தின் ஒருமித்த சிறப்புக்களை அறிஞர்கள் கூட்டம் ஆனந்தமடையும்படி இப்பொழுது கொஞ்சம் கூறுவோம்.*

### முல்லை

30. பொதுவன் ஆகிஅண் டத்திரள் யாவையும் புரக்கும்
பதுமை நாயகன் சிறப்புறப் புரப்பினும் பகுப்பில்
றொதும லாய்அவிர் பான்மையோன் என்பதை நுவலப்
பொதுவர் ஆயினர் முல்லையி னிடைவசிப் போரும். (17)

*(பொழிப்புரை) உயிரினங்கள் அனைத்திற்கும் பொதுவானவன் ஆகி அகிலாண்ட கோடிகளையும் காக்கும் தொழிலை உடையவராகிய திருமகள் கேள்வன் எம் நிலத்தை நன்கு பாதுகாத்து வந்த போதும் (திருமால் முல்லை நிலத் தலைவன் எனக் கூறப்பட்ட போதிலும்) அவர் அகண்டமானவராகவும் வேண்டுதல் வேண்டாமை இலாதவராகவும் விளங்குபவர் என்பதைக் கூறுவது போல முல்லை நிலத்து ஆயர்களும் பொதுவர் எனப் பெயர் பெற்றனர்.*

*பொதுவன் ஆகி என்பதற்கு ஆயர்பாடியில் இடையர் குலத்தில் கண்ணபெருமானாகத் திருவவதாரம் செய்து எனப் புராண மரபில் கொள்ளினும் இழுக்கின்று.*

*பகுப்பு இல் – அகண்டமான, பூரணமான. ஆயர் பொதுவர் என அழைக்கப்படுவதற்கு ஒரு காரணம் கற்பித்தலின் ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.*

31. வருக என்றழைத் திடர்கெடுத் தருள்கரி வதனன்
மருகன் என்றுநா ரணன் அவன் திருஉளம் மகிழ்ச்சி
பெருக நல்விருந் தூட்டிடும் இச்சைபெற் றேகொல்
பருக ஓகையார் தானிய நிரைஇடப் பணித்தான்? (18)

*(பொழிப்புரை) தன் அடியார்களை வா என அழைத்து அவர்களது துன்பங்களை மாற்றுபவர் ஆகிய யானைமுகப் பிள்ளையார் தன் தங்கையின் மகன் ஆதலால், அவர் மனம் நிறைவுறும்படி நிறை விருந்து படைத்து உண்ண வைக்கும் ஆசை பற்றியோ உண்ண உவகை தரும் முதிரை வகைகளைப் பயிர் செய்யுமாறு (முல்லை நிலத்தை) அமைத்தார்?*

*முல்லை நிலத்திற்குரிய கருப்பொருள்களில் உணவு அவரை, துவரை, கொள்ளு, காராமணி முதலிய தானிய வகைகள் ஆகும். விநாயகப் பெருமானுக்குப் பிடித்தமான உணவாகப் படைக்கப் படுவனவும் தானியங்களே. இந்த இரண்டையும் இணைத்து, திருமால் தம் மருகராகிய விநாயகருக்குப் பெரும்படையவிலட வசதியாகத் தமக்குரிய முல்லை நிலத்தில் தானியங்கள் விளையுமாறு செய்கிறார் போலும் என்கிறார்.*

*தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை ....... முல்லைக் கருப்பொருளே*

*என்பது நம்பி அகப்பொருள்.*

*அவரைபொரி எட்பயறு துவரைஅவல் சர்க்கரையொடு அமுது செயும் விக்னபதி யானைச் சகோதரனும் என்பார் அருணகிரி நாதர். (வேடிச்சி காவலன் வகுப்பு 10)*

32. அரன்மு டிக்கண்ஆட் டினர்தமக் குவந்தருள் அளிக்கும்
வரம்ம லிந்தபால் தயிர்நெய்கோ சலம்நல்கோ மயமும்
உரம்எ னத்தன்பால் பெய்பசுக் குலங்கள்உண் டிடப்புல்
விரவ என்றும்ஈந் தின்பளித் திடும்வியன் முல்லை (19)

*(பொழிப்புரை) சிவபெருமானை திருமுழுக்காட்டுபவர்களுக்கு அருள் தரும் நன்மை மிக்க பால், தயிர் நெய், கோசலம், கோமயம் ஆகிய ஆன் ஐந்தையும் தருகின்ற ஆன் கூட்டங்கள் உண்ணுமாறு எல்லா இடங்களிலும் புல்லை நிறைய விளைவித்துத் தரும் பெருமை உடையது முல்லை நிலம்.*

33. மாய னார்எனும் பொதுவர்கள் மகிழ்வின்ஆ னாய
நாய னார்எனப் பசுஇனம் புரந்தருள் நமசி
வாய னார்உளம் மகிழவேய்ங் குழலிசை வழங்கித்
தூய நாரணன் சிவன்ஒன்றென் சமரசம் தோய்வார். (20)

*(பொழிப்புரை) திருமாலைத் தங்கள் கடவுள் எனக் கொள்ளும் யாதவர்களால் விரும்பப்படுகின்ற ஆனாய நாயனார் பசுக்குலங்களைப் பேணிப் பாதுகாத்ததோடு, குழலிசையில் திருவைந்தெழுத்தை இசைத்துச் சிவபெருமானும் நாராயணனும் தம்முள் வேறானவரல்லர் என்னும் சமரச நிச்சயத்தைக் காட்டுவார்.*

*இடையர் இனத்தில் தோன்றியது, ஆனிரை காத்தது, புல்லாங்குழல் இசைத்தது ஆகியன ஆனாய நாயனாருக்கும் கண்ண பெருமானாகிய திருமாலுக்கும் பொதுவானவை.*

34. சிறந்த கோபருக் கைம்புலம் பொலிசுகம் தேக்கப்
பிறந்த கோபியர் பசுக்களின் முலைகொள்பால் பிதுங்கக்
கறந்து பால்செய்து தயிர்செய்து மற்றதைக் கடைந்து
நிறந்த வாநவ நீதம்மோர் செய்துநெய் செய்வார். (21)

*(பொழிப்புரை) நல்ல பொதுவர்களுக்கு ஐம்புல இன்பம் தரும் இடைச்சியர்கள் பசுக்களின் பாலைக் கறந்து, தயிராக்கி, அதைக் கடைந்து வெண்ணெயும் மோரும் ஆக்கி, நெய்யையும் உண்டாக்குவர்.*

*நிறம் தவா – தனக்குரிய குணத்தில் குறைவற்ற, நிறம் குன்றா எனினும் ஆம்.*

35. தொல்லை நற்பதி யாம்உயிர்த் துணைஉறுந் துணையும்
முல்லை காத்தமை தரும்குல மங்கையர் முயங்கும்
எல்லை அற்றசீர் முல்லைமாண் புரைசெய்வார் எவரே?
செல்லை ஊர்இறை காப்பவிர் திணைவளம் பகர்வாம் (22)

*(பொழிப்புரை) தம் ஊழ்வினையால் அமைகின்ற கணவனாகிய உயிர்த்துணை அமையும் வரையும் (திருமணம் ஆகும் வரையில்) தம் கற்பைப் பேணிக் காத்துக் கொள்ளும் குலமகளிர் நிறைந்த பெரும் சிறப்புடைய முல்லை நிலத்தின் உயர்வை முழுமையாகக் கூறவல்லவர் யார்? அடுத்து மேகவாகனனாகிய இந்திரனால் காக்கப்படுகின்ற திணை ஆகிய மருதத்தின் வளத்தினைக் கூறுவாம்.*

*முல்லை – கற்பு, முல்லை நிலம் (காட்டுப் பகுதி). செல்லை – மேகத்தை. ஊர் இறை – செலுத்துகின்ற அரசன், இந்திரன், வினைத்தொகை. "வேந்தன் மேய பெரும்புனல் உலகமும்" என்பது தொல்காப்பியம்.*

## மருதம
### *(கொச்சகக் கலிப்பா)*

36. மிகப்பசந்த செஞ்சாலி வியன்பயிரின் இடையிடையே
சகத்திரம்ஆம் தொகைஅமையச் சார்ந்தசெந்தா மரைமலர்கள்
மகத்துவத்தில் தமைப்புரக்கும் வானவர்கோன் சாரூபம்
புகப்பெறுதன் மையைக்காட்டிப் பொலிவவள வயல்கள்எலாம்(23)

*(பொழிப்புரை) மிகப் பசுமையான செந்நெற் பயிர்களுக்கிடையே ஆயிரக்கணக்கில் மலர்ந்துள்ள செந்தாமரைப் பூக்கள் நிறைந்திருப்பது பெருமையோடு தமைப் பேணிக் காக்கின்ற இந்திரனுடைய வடிவத்தினை வயல்கள் பெற்று விளங்குவதைப் போலக் காட்சியளிக்கிறது.*

*இந்திரன் பசுமை நிறமுடையவன்; ஆயிரம் கண்ணன். பசுமையான நெற்பெயர்களுக்கிடையில் மலர்ந்துள்ள தாமரைகள் கண்களைப் போல உள்ளன. சகத்திரம் ஆம் – ஆயிரம் என்னும் எண்ணைச் சுட்டாமல் பல என்னும் பொருளில் வந்தது. வயல்கள் எலாம் தன்மையைக் காட்டிப் பொலிவ என்பது முடிபு.*

37. வேலையிடை அணைந்துறுசூல் மேவிஅவிர் மின்பயந்து
சோலையில்உற் றிடித்தொனியால் தோய்தருபுட் குலம்ஓட்டிக்
காலையிடை மாலையும்நல் காவல்செயும் இந்திரன்செங்
கோலைஅங்ஙன் ஓர்குறையும் கூடாது முகில்இனமே (24)

*(பொழிப்புரை) மேகக் கூட்டங்கள் கடலிற் படிந்து, கருப்பமுற்று, பிரகாசிக்கின்ற மின்னல்களைத் தோற்றுவித்து, தோட்டங்களிற் சென்று, இடியோசையால் பறவை இனங்களைத் துரத்தி, மருத நிலத்தைக் காலை மாலை என எப்போதும் பாதுகாக்கின்ற இந்திரனுடைய நல்லாட்சிக்கு எந்தச் சிறுமையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளும்.*

*முகில் இனம் அணைந்து, மேவி, பயந்து, ஓட்டிச் செங்கோலை ஓர் குறையும் கூடாது பேணும் என்பது என முடிபு காண்க. சொல்லெச்சம். மருத நிலத்தின் வளத்திற்கு மழை இன்றியமையாததாதலின் மேகங்கள் இந்திரனின் செங்கோலைப் பேணுகின்றன என்கிறார்.*

38. செருக்கெடுக்கும் மூலமலத் திமிரம்அறக் கண்நோக்கால்
குருக்கெடுக்கும் தன்மையைப்போல், குளிர்புனல்கௌ சிகநதிதான்
பெருக்கெடுக்கும் வெள்ளத்தால் பிணக்கெடுக்கும் கொடுங்கோடை
உருக்கெடுக்கும்; பேர்அருளால் உலகெடுக்கும் நலம்மிகவே. (25)

*(பொழிப்புரை) இறுமாப்பை மிகுவிக்கின்ற ஆணவ மலம் என்னும் இருள் நீங்கும்படியாக ஞானாசாரியன் தன் அருட்பார்வையால் அழிப்பதைப் போலக் குளிர்ந்த நீர் நிறைந்த கௌசிக நதி தன் நீர்ப் பெருக்கால் கொடிய*

*கோடை காலத்தின் தன்மையை மாற்றிவிடும். அந்த ஆறு தன் அருள் வலிமையால் நன்மைகள் பெருகுமாறு உலக உயிர்களை மேல்நிலைக்குக் கொண்டு வரும்.*

*குருநாதர் ஆணவத்தின் வலிமையைக் குறைப்பது போலக் கௌசிக நதி கோடையின் வெப்பத்தைக் குறைக்கும் என்க. உலகு எடுக்கும் என்புழி உலகு இடஆகுபெயராக உயிர்களை உணர்த்திற்று. ஆறு இம்மை மறுமை நலங்களைத் தருகிறது என்றபடி.*

39. களவிறந்த பெருங்கருணைக் காலகா லேச்சுரன்தான்
அளவிறந்த உயிர்த்திரள்கள் ஆற்றியபுண் ணியத்தளவில்
கொளவிறந்த பயன்கூட்டக் கூர்அறிவாய்த் திகழ்செயல்போல்
வளம்விறந்த கௌசைநதி மதகளவில் உறும்எவற்றும். (26)

*(பொழிப்புரை) வஞ்சனை இல்லாத பேரருளைப் பொழிகின்ற காலகாலேச்சுரப் பெருமான் எண்ணற்ற உயிரினங்களுக்கு அவை செய்துள்ள நல்வினைகளுக்கேற்பப் பயன்களைக் கூட்டுவிக்க, அவற்றின் அறிவாக இருந்து இயங்குவதைப் போன்று வளப்பம் மிக்க கௌசிக நதி தன்பால் அமைந்துள்ள மதகுகளுக்கேற்ப எல்லாவயல்களுக்கும் பயன்விளைவிக்கும்.*

*விதிக்கேற்ப மதி அமைந்து நல்வினைப் பயனைச் செப்பமாக நுகரவைப்பதைப் போல மதகின் அளவிற்கேற்ப ஆற்றுப்பயன் அமையும்.*

40. விருந்தழைக்கும் அறத்தினர்போல் விரிவுறுபாற் கடல்கடைந்து
மருந்தழைக்கும் இமையவர்போல் வாஞ்சைமிகும் தலைவன்அன்பில்
தருந்தழைக்குள் மகிழ்ச்சிபெறும் தலைவியைப்போல் மள்ளரெலாம்
இருந்தழைக்கும் பிசையயலுள் எதிர்கொடழைத் தறலுகுப்பார். (27)

*(பொழிப்புரை) தம் வீட்டிற்கு வருகின்ற விருந்தினர்களை அன்போடு எதிர்கொண்டு அழைத்து வருகின்ற இல்லறத்தாரைப் போன்றும், பரப்பளவு மிக்க பாற்கடலைக் கடைந்து அமுதத்தை ஆவலோடு எதிர்கொண்ட தேவர்களைப் போன்றும், தன்பால் மிகுந்த அன்பு கொண்டவனாகிய காதலன் விருப்பத்தோடு தருகின்ற தழைகளாலான ஆடையால் பேருவகை கொள்கின்ற காதலியைப் போன்றும் விவசாயிகள் எல்லோரும் பெருமையும் வளர்ச்சியும் உள்ள கூட்டமாகப் புது வெள்ளத்தை மகிழ்ச்சியோடு எதிர்கொண்டு வரவேற்று வயலுள் பாய்ச்சுவர்.*

*களவுக் காலத்தில் தலைவன் தலைவிக்கு இலைகளையும் மலர்களையும் வைத்துக் கட்டப்பெற்ற தழையாடையைக் கையுறையாக வழங்குவான். காதலி அதனைப் பெருமகிழ்ச்சியுடன் பெற்றுக்கொள்வாள். தலைவனின் கையுறையைப் பெறும் தலைவியின் மகிழ்ச்சியை,*

*ஒற்றினள் கண்ணில் முலைமீ தழுத்தினள் ஓதியின்மேல்*
*சுற்றினள் தூய கனிவாயில் வைத்தனள் தோள்இணையால்*
*பற்றினள் ஈசர் கமலா லயத்தின்உள் பைந்தழையை*
*மற்றிகழ் தோள்அண்ண லேநலங் காமல்முன் வைத்தனளே*

*(திருவாரூர்க் கோவை 155) என்பன போன்ற அகப்பொருள் பாடல்களால் அறியலாம்.*

41. அரம்படித்துத் தனைப்படிப்பார்க் காரணக்கும் பவிர்தரும்தன்
சிரம்படிக்கும் பரன்அடிசேர்த் திடச்சமன்செய் திடலேபோல்
குரம்படிக்கும் மேதிஇனம் கொண்டுழுது சமம்பெறவே
பரம்படிக்கும் மள்ளர்இசைப் பாட்டொலிகேட் டிடிநாணும். (28)

*(பொழிப்புரை) ஐம்புலன்களின் சேட்டையை அடக்கித் தம்மைப் படிப்பவர்களைத் தம் முடிவாக உள்ள சிவபெருமானின் திருவடிகளில் சேர்ப்பதற்காக வேதங்கள் அவர்களுடைய நல்வினை தீவினைகளைச் சமம் ஆக்குவது போல (இருவினையொப்பு) காற்குளம்புகளை உடைய எருமைகளைக் கொண்டு உழுது வயல்களைச் சமமமாக்குவதற்காகப் பரம்படிக்கின்ற விவசாயிகளின் பாட்டொலியைக் கேட்டு இடிவெட்கமுறும். ஆரணக்கும்பு – வேதநூற்றொகுதிகள்.*

42. காற்றுநடப் பொழிற்கௌசைக் காலகா லேச்சரன்பொன்
மாற்றுநடத் திருத்தாளை மனம்நடுமெய்த் தவத்தினர்போல்
கூற்றுநடக் கண்மள்ளக் கோதையர்தம் குழல்அவிழ
நாற்றுநடப் புகுவார்பொன் நகில்குலுங்க வளைஅலம்ப. (29)

*(பொழிப்புரை) நல்ல தென்றல் உலாவுகின்ற சோலைகள் நிறைந்த கோவில்பாளையத்தில் எழுந்தருளியுள்ள காலகாலப் பெம்மானின் மாற்று உயர்ந்த பொன் போன்றதும் திருக்கூத்து இயற்றுவதுமாகிய திருவடியைத் தவசிகள் தம் உள்ளத்தின்கண் ஊன்றுவதைப் போல, இயமனைப் போலக் கண்டாரை வருத்துகின்ற கண்களை உடைய குடியானவப் பெண்கள் தங்களுடைய கூந்தல் அவிழ்ந்து சரியுமாறும், தேமல் பூத்த மார்பகங்கள் குலுங்குமாறும், கை வளையல்கள் ஒலிக்குமாறும் நாற்று நடத் தொடங்குவர்.*

*தவத்தினர் தம் உள்ளத்தில் இறைவனடியை நட்டால் பேரின்பம் விளைவதைப் போல உழத்தியர் நாற்று நடுவதால் நெல் விளைவாகிய இன்பம் விளைகிறது என்னும் பயனுவமையையும் (தொழில் உவமையோடு) சிந்திக்கலாம்.*

43. விதித்திடுவான் தொழிற்கும்இக்கு வில்வேட்கும் உலகனைத்தும்
துதித்திடுவான் திதித்தொழிற்கும் துணையாகும் கடைசியர்கள்
பதித்திடுவான் பயிர்இனங்கள் பசந்தவிர்இந் திரனேபோல்
மதித்திடுவான் பதிஅணைய வழிக்கொளல்போல் வளர்ந்தனவே. (30)

*(பொழிப்புரை) படைக்கின்ற பிரமனின் தொழிலுக்கும், கரும்பு வில்லினை உடைய மன்மதனின் காரியத்திற்கும், உலகத்தில் எல்லோராலும் போற்றப்படுபவராகக் காக்கும் திருமாலின் செயற்பாட்டிற்கும் துணையாக உள்ள பள்ளியர்களால் நடப்பெற்ற சிறந்த பயிர்வகைகள் யாவும் பச்சைநிறம் கொண்டு விளங்குகின்ற இந்திரனைப் போலப் பெருமை மிக்க வானுலகத்திற்குச் செல்லப் புறப்படுவன போல மேல்நோக்கி வளர்ந்தன.*

*மக்கள் பிறக்கவும், காமம் சிறக்கவும், உலகத்தார்க்கு வேண்டிய உணவுத் தானியங்களை உண்டாக்கவும் கடைசியர் கருவியாகின்றனர். இதையே முத்தேவர்கட்குத் துணை புரிவதாகக் கூறுகிறார்.*

44. திரப்படுநல் உழுதொழிலில் சீர்த்திமிக்க தாகும்எருப்
பரப்பிடுதல் அதில்மேன்மை பாதுகாப் பென்றுணர்ந்து
தரப்படுநீர் அளவறிந்து தகவிடுத்தும் மிகில்வடித்தும்
சுரப்பமைஊக் குடன்முயலும் தொழிலினர் ஆயினர் களமர். (31)

*(பொழிப்புரை) உறுதி மிக்க நல்ல வேளாண்மைத் தொழிலில் பயிர்களுக்கு உரம் இடுதல் சிறப்புடைய ஒன்று எனவும், பயிர்ப் பாதுகாப்பு அதைவிட மேலானது என்றும் நன்றாக அறிந்து, விவசாயிகள் வயல்களுக்குப் பாய்ச்சுகின்ற தண்ணீரின் அளவினை அறிந்து தேவையான அளவு பாய்ச்சியும் அதிகமாகி விட்டால் வடித்தும் நாளுக்குநாள் மிகுகின்ற ஊக்கத்துடன் பணியாற்றுவார்கள்.*

*களமர் உணர்ந்து அறிந்து விடுத்தும் வடித்தும் சுரப்பு அமை ஊக்குடன் முயலும் தொழிலினர் ஆயினர் என்பது முடிபு. "ஏரினும் நன்றால் எரு இடுதல்; கட்டபின் நீரினும் நன்றதன் காப்பு" என்பது தமிழ்மறை.*

45. வளைகளைஆர்ப் புறஅசைத்து, மலிதருஞெண் டாமைஇனம்
அளைகளைஎய் திடவெருட்டி, ஆடவர்பால் ஆம்மையல்
களைகளையும் கடைசியர்கள் கமலமொடுற் பலம்ஆம்பல்
களைகளைந்து சூடிஅவை கன்றஒப்பன் றென்றெறிந்தார். (32)

*(பொழிப்புரை) தம் கையில் அணிந்துள்ள வளையல்கள் ஒலிக்கும்படி ஆட்டடி, வயல்களில் அதிகமாக உள்ள நண்டு ஆமை முதலியனவற்றைத் தத்தம் பொந்துகளிற் சென்று பதுங்குமாறு அச்சுறுத்தி – ஆண்களின் காதல் நோயைத் தீர்க்கின்றவர்களாகிய பள்ளியர் தாமரை, நெய்தல், அல்லி முதலிய மலர்களாகிய களைகளைப் பிடுங்கி, அவற்றைத் தம் கூந்தலில் சூடி, அவை வாடிய உடனே தமக்குத் தக்கது அல்ல எனக் கருதி எடுத்து வீசினர்.*

*அம்மலர்களை நிகர்த்த தம் உறுப்புக்கள் வாடாமல் எழிலோடு விளங்க அவை வாடுவதால் ஒப்பு அன்று என்று எறிந்தார் என்க. கடைசியர்கள் அசைத்து, வெருட்டி, களைந்து, சூடி எறிந்தார் என்பது பொருள் முடிபு.*

46. காணாதுள் ளமைகருவும் காத்துமக வென்றுயிர்த்துப்
பேணார்வத் தினர்கண்முன் பெற்றபயிர் வளர்ப்பதும்ஓர்
மாணாமோ? வளர்ந்துபயன் வழங்கஇசை காலத்தில்
நாணார்மங் கையர்செயல்போல் நன்குதலை தாழ்த்தனவே. (33)

*(பொழிப்புரை) – கண்ணுக்குத் தெரியாமல் கருப்பப்பைக்குள் இருக்கின்ற கருவினைக் காப்பாற்றி, பிள்ளையாகப் பெற்றெடுத்து, வளர்க்கின்ற தாய்மார்களுக்குக் கண் எதிரே உள்ள பயிரை வளர்ப்பது ஒரு பெரிய செயல் ஆகுமோ? வளர்ந்த நெற்பயிர்கள் பயன் தருகின்ற சமயத்தில் நாணம் உடைய மங்கைப் பருவ மகளிரைப் போல (முற்றிய கதிர்களின் கனத்தால்) தலை குனிந்து கொண்டு விட்டன.*

47. தலைகுனிந்தார் தம்புடையே தமக்கின்ப மிக்கிசைவா
நிலைகுனிந்து கொண்டமள்ளர் நெஞ்சம்மகிழ்ந் தவர்ஆகிக்
கொலைகுனிந்த வெள்வாயார் குயம்ஏந்தி வியர்வோங்க
அலைகுனிந்த கடல்என்ன அறுத்தரிக ளாய்அமைத்தார். (34)

*(பொழிப்புரை) விளைந்து முற்றிய கதிர்களோடு தலைசாய்ந்த பயிர்களுக்கிடையே – நல்ல விளைச்சலால் மிகவும் மகிழ்ச்சி அடைந்தவர்கள் ஆகிய – விவசாயிகள் கொல்லும் தன்மையை உடையதும் வளைந்ததும் சாணை பிடித்தலால் வெண்மையான நெட்டும் பகுதியை உடையதுமாகிய அரிவாளைத் தாங்கிப் புகுந்து, அறுவடை செய்து, அலைகடலைப் போலப் பரவலாக நெற்கதிர்களைப் பரப்பி வைத்தனர்.*

48. சுமைஎன்னக் கட்டுபு, விண் தோய்தரவே போர்புரிந் தாண்டு
அமைஎன்ன அமைதோள்ஆர் அணங்கினர்க்கண் டீங்கிவர்கட்கு
இமைஎன்ன இல்லாமை என்றுவந்திந் திரன்கண்டான்
நமைஎன்ன அவன்பாதம் நனிவணங்கிக் கீழ்அணைந்தார். (35)

*(பொழிப்புரை) நெற் கதிர்களைப் பாரங்களாகக் கட்டி, மிக உயரமாக அடுக்கிக்கொண்டே போனபோது அந்த நெற்போர்கள் வானுலகை எட்டிவிட்டன. அப்போரின்மீது இருந்த உழவர்கள் வானுலக மங்கையர்களைக் கண்டு, அவர்கள் கண்களை இமைப்பதே இல்லையே என வியந்தனர். அப்போது மருதநிலக் கடவுளாகிய தேவேந்திரன் பார்த்துவிட்டதால் அவன் அடிகளை வணங்கிவிட்டுப் போரின் மீதிருந்து கீழே இறங்கினர்.*

*அமை என்ன அமை – பச்சை மூங்கிலைப் போன்று அமைந்த, இமை இல்லாமை என்ன என்று உவந்து. இமை முதனிலைத் தொழிற்பெயர். உவந்து – வியப்படைந்து. இப்பாடலில் உயர்வு நவிற்சி அணி பயின்றது.*

49. மெய்க்கோலம் பெறவயல்முன் மிதித்துநடப் பண்படுத்தும்
மைக்கோல மேதிகளே மற்றிதையும் மிதிப்பனைக்
கைக்கோலப் போர்பிரித்துக் களம்படுத்துத் துவைத்தடித்து
வைக்கோலும் நெல்லும்எனும் வகைஅமையப் பிரித்திட்டார். (36)

*(பொழிப்புரை) முதலில் வயல்கள் நடுவதற்கேற்ற சமதள வடிவம் பெறுமாறு மிதித்துப் பண்படுத்திய மேகம் போன்ற எருமைகளே இந்தக் கதிர்களையும் மிதிக்கட்டும் என்று விட்டு, கைகளால் நெற்போர்களைப் பிரித்து, களத்தில் இட்டுத் துவைத்து அடித்து, நெல்லையும் வைக்கோலையும் தனித்தனியாகப் பிரித்தனர்.*

*மெய்க்கோலம் – இங்கு நடுகைக்கேற்ற சமதளம் ஆதல். மற்று அசை.*

50. காற்றில்விடுத் துறுபதடி களைக்களைபோல் களைந்தகலத்
தூற்றிஇறை தனக்காறில் துதைஒருபங் களித்தங்ஙன்
ஏற்றிடுவார் தமக்கெல்லாம் இச்சைஅடங் கிடவழங்கிப்
போற்றிடுநெல் திரள்கூண்டுள் புகுத்தி,அறம் புரிந்தமைவார். (37)

*(பொழிப்புரை) பிரித்த நெல்லைக் காற்றில் தூவி, பதர்களைக் களைகளை நீக்கியதைப் போல் நீக்கி, அரசிற்கு விளைவில் ஆறில் ஒரு பாகத்தை வரியாகச் செலுத்தி, களத்தில் இரப்பவர்களுக்கு எல்லாம் மனநிறைவு ஏற்படுமாறு கொடுத்து, மீதமாகப் பாதுகாக்கப் பட வேண்டிய நெல்லைக் குதிர்களுள் நிரப்பி இல்லறத்திற்குரிய செயல்களில் ஈடுபடுவர்.*

*இங்கு அறம் புரிந்து அமைவார் என்றது, "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங் கைம்புலத்தா றோம்பல் தலை" என்பதனை நினைந்து. இதனால்தான் திருக்குறளில் கூறப்பெறாத அரசிறையை மட்டும் விதந்து கூறினார்.*

51. கூட்டுறுநெல் லினைஎடுத்துக் குற்றரிசி ஆக்கிஅதைச்
சூட்டுறுநீர் பெய்துறுவெண் சோறாக்கித் தம்மனையின்
மாட்டுறுவார்க் கிட்டறத்தின் வடிவாக்கி, உயிர்க்கூட்டி
வீட்டுறுமெய்ப் பரம்பரையார் மேன்மைவிளம் பிடும்தகைத்தோ?(38)

*(பொழிப்புரை) இவ்வாறு சேமிக்கப்படும் நெல்லைக் குத்தி, அரிசி ஆக்கி, அதனை வெண்சோறாக வடித்து, தம் வீட்டிற்கு வருபவர்கள் அனைவருக்கும் பரிமாறி, இந்த அன்னதானமாகிய செயலை நல்வினையாகத் தம் ஆன்மாவில் பொருந்த வைத்து, இதன் பயனாக வீட்டின்பத்தை எய்துகின்ற மரபினர்தம் பெருமை சொல்லிற்கு அடங்காதது ஆகும். உறுவார்க்குச் சோறு இட்டு, இதைப் புண்ணியமாகிய நுண் பொருளாகத் தம் உயிருடன் கூட்டி வீடு பெறும் மரபினர் என்க.*

52. இன்னவகை அறம்புரிந்திட் டிமையவர்ஊ ரிடைஅறம்இன்று
என்னவெறுத் திடும்தவப்பே றீந்தருளும் இந்நாட்டை
முன்னமைபுண் ணியர்க்கொண்டு முற்றும்அழித் துத்துரத்தும்
இன்னல்அமை பொன்நாட்டை எங்ஙன்இணை எனச்சொல்வாம்? (39)

*(பொழிப்புரை) இவ்விதமாக நல்லறத்தில் ஈடுபட்டிருந்து, வானுலகில் தருமம் புரிய வாய்ப்பில்லை எனச் சுவர்க்கத்தை இகழ்ந்து தள்ளும் தவப் பயனை வழங்கும் இந்தக் கொங்கு நாட்டினை, தாம் முன்பு செய்த நல்வினைப் பயன் உள்ளவர்களைத் தன்னிடம் வரவழைத்து அவர்களுடைய புண்ணியம் எல்லாவற்றையும் செலவாகவிட்டுப் பிறகு தன்னிடத்திலிருந்து வெளியேற்றி விடுவதாகிய தேவலோகத்திற்கு இணையானது என எவ்வாறு கூற முடியும்? முடியாது என்றபடி.*

*சுவர்க்கம் முதலிய பதவிகள் ஓர் உயிரின் புண்ணியத்தின் அளவே ஆகும். நல்வினை துய்க்கத்துய்க்கத் தீர்ந்து இறுதியில் இல்லை ஆகும். அந்நிலையில் சுவர்க்கத்திலிருந்து வெளியேற்றப்பட்டு மீண்டும் பூவுலகில் பிறக்க வேண்டும் எனச் சாத்திரங்கள் கூறுகின்றன. "இந்திரன்ஊர் எனும் சுவர்க்கம் தன்பால் வந்தோர்க்கு இயைந்த புண்ணி யத்தளவில் இனிய போகம் தந்திடும்" (நானிலைச் சதகம் 15) என்பார் வண்ணச்சரபம் சுவாமிகள். வீட்டின்பம் ஒன்றே நிலையானது ஆகும்.*

*(அறுசீர் விருத்தம்)*

53. காரைநாட் டியற்பூஞ் சோலைக் கடிகக னத்தைந் தாரு
சீரைநாட் டிடச்செய் கொங்கின் சிறப்புரை அளவோ? தெய்வப்
பேரைநாட் டியற்பேர்க் கோயிற் பெருநகர்த் திலகம் வாய்ந்த
ஆரைநாட் டியல்பு சொல்வார் ஆர்இந்நாட் டினத்துள் அம்மா.(40)

*(பொழிப்புரை) மேகத்தைத் தம் உச்சியில் நிறுத்தி வைத்துக் கொள்ளும் இயல்பினை உடைய பூங்காவனங்களின் நறுமணத்தைக் கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களின் சிறப்பினை உடைய அழகிய மேல் உலகத்தில் பரப்புகின்ற வளம் மிக்க கொங்கு நாட்டின் சிறப்பு சொல்லுக் கடங்காததாகும். கடவுளின் பெயரை நிலைநிறுத்துகின்ற புகழை உடைய கோயில்பாளையம் என்னும் பெருமை மிக்க நகரமாகிய திலகம் வாய்ந்த ஆறை நாட்டின் தன்மையை இவ்வுலகில் கூறவல்லார் யார்? யாரும் இல்லை என்றபடி.*

*கோயிற் பெருநகர் – கோயில் பாளையம். இவ்வூர் ஆறை நாட்டிற்குத் திலகம் போன்றது என்கிறார். ஆறை ஆரை என நின்றது எதுகை நோக்கிய போலி. கொங்கு நாட்டின் இருபத்து நான்கு பிரிவுகளுள் ஆறை நாடு ஒன்று. இது இன்றைய கோவை, அவிநாசி வட்டங்களும் பல்லடம் வட்டத்தின் வடமேற்குப் பகுதியும் அடங்கிய நிலப்பகுதி ஆகும்.*

*நாட்டுப் படலம் முற்றிற்று.*

# *3. நகரப் படலம்*

*(அறுசீர் விருத்தம்)*

54. தாயின்மா புரம்சாத் தேயர் தமக்குசை வர்க்குக் கைலை;
சேயின்மா புரம்கௌ மாரத் திரட்கு;வை ணவர்க்கு மாயன்
தோயின்மா புரம்;மெய்த் தெய்வத் தொண்டுளார்க் கவர்கட் கான
கோயின்மா புரம்ஆர் சீலம் கூறமேல் வளர்வ தம்மா! (1)

*(பொழிப்புரை) சக்தி வழிபாட்டினர்க்குக் கோயில்பாளையம் தம்* தாயைப் போன்ற தேவி எழுந்தருளியுள்ள தலம் ஆகும். *தம் தாயைப் போன்ற தேவி எழுந்தருளியுள்ள தலம் ஆகும். சைவர்களுக்குக் கயிலாயம் ஆகும்; முருக பக்தர்களுக்குக் கௌமாரத் திருத்தலம் ஆகும்; திருமால் அடியார்களுக்குப் பகவான் எழுந்தருளியுள்ள திவ்வியத் திருப்பதி ஆகும். இவ்வாறே கௌசைப்பதி நாமரூபம் இல்லாத பரம்பொருளாகத் தியானித்து உபாசிப்பவர்களுக்கும் ஏற்ற புனிதத் தலம் ஆகும். இத்தகைய நகரத்தின் பெருமை அடுத்துக் கூறப்படுகிறது.*

*மாயன் தோய் இன் மாபுரம் என்க. மெய்த்தெய்வம் என்றது இறைவனிடம் எப்போதும் நீக்கமற நிலைபெற்றுள்ள சொரூப லட்சணத்தை நினைந்து. நாம ரூபம் தடத்த லட்சணம் என்பதைச் சாத்திரம் தெளிவாக்குகிறது. ஒன்று மெய் எனில் ஏனையவை பொய் எனும் அருத்தாபத்தி இங்கு பொருந்தாது.*

55. விரிஅறம் பவம்செய் வார்கொள் மெய்ப்பயன் அநுப விக்கப்
புரிதலின் வினைஒப் பாக்கும் புனிதகா லன்செய் பூசை
பெரிதுகொண் டருள்அன் னோற்குப் பெய்கால காலே சன்தான்
பரிவில்வாழ் கௌசி கப்பேர்ப் பதிப்புகழ் பகரல் ஆமே? (2)

*(பொழிப்புரை) விரிவான புண்ணியம் பாவம் என்னும் இரு வினைகளைச் செய்பவர்கள் அதன் பயனாகக் கொள்கின்ற இன்ப துன்பம் ஆகிய தவறாத நுகர்ச்சியைத் துய்க்க வைப்பதால் இருவினையொப்பை உண்டாகச் செய்கின்ற தூய்மை மிக்கவனாகிய இயம தருமனின் வழிபாட்டை ஏற்றுக் கொண்டு அவனுக்குத் திருவருள் புரிந்த காலகாலேசப் பெருமான் உரிமையோடு எழுந்தருளியுள்ள கோயில் பாளையத்தின் பெருமை சொல்லிற்கு அடங்குவதா? அடங்காது என்றபடி.*

*இறந்தபின் பாவங்களுக்கு நரகத்தில் தண்டனை வழங்கி அவற்றை இயமன் ஒழிக்கிறான். புண்ணியம் இம்மை மறுமைச் சுகங்களால் தீர்க்கப்படுகின்றன. இவ்வாறு நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் சமநிலை அடைதல் இருவினையொப்பு எனப்படும். இதனை அடுத்தே இறைவனின் திருவருட் பதிவாகிய சத்திநிபாதம் ஏற்படும் என்பது சைவ சித்தாந்தம். இதற்கு இயமன் உதவுதலின் புனித காலன் என்றார்.*

*இயமனுக்கு அருள் புரிந்த வரலாறு அடுத்ததாகிய இயமதருமன் வழிபடு படலத்தில் கூறப் பெற்றுள்ளது.*

*புடை நகர்*

*(கலித்துறை)*

56. திரைஎ றிந்திடு வாவியில் தவளமாய்ச் சிவப்பாய்
நிரைபொ ருந்திய மலர்கள்தம் மிசைஉற நேர்வார்
பரைஅ ருட்கரு ணாகர வல்லிதாள் பணிந்து
கரைஇல் செல்வம்கல் வியைநிறைத் தமைசெயல் காட்டும்.(3)

*(பொழிப்புரை) அலை வீசுகின்ற குளங்களில் வெண்மையாகவும் செம்மையாகவும் தாமரை மலர்கள் கூட்டம் கூட்டமாக நிறைந்து விளங்குவது இத் தலத்தை அடைபவர்கள் அம்பிகை ஆகிய கருணாகரவல்லியைத் தொழுது எல்லையற்ற பொருட் செல்வத்தையும் கல்விச் செல்வத்தையும் பெறுவதைக் காட்டும்.*

*மலர்கள் (உடைய) செயல் நேர்வார் நிறைத்தமை காட்டும் என்பது பொருள் முடிபு. வெள்ளைத் தாமரை கலைமகளின் அருளாம் கல்வியையும் செந்தாமரை அலைமகள் வழங்கும் பொருட் செல்வத்தையும் குறிக்கின்றன. இவர் இருவரும் கருணாகரவல்லியின் தோழியர் ஆதலின் அம்பிகையை வழிபட்டவர் இரண்டு பேறுகளையும் பெறுவர்.*

57. தருவின் மேல்கிடந் துறங்கிடும் முகில்மிசை தாவிப்
பொருவில் மஞ்ஞைதன் சிறைவிரித் தாடியற் பொலிவு
திருவ மைந்தஇந் திரன்கவு சிகபுரிச் சிறப்பைத்
தெருளும் கண்கள்முற் றினும்தெரிந் தாடிடல் சிவணும். (4)

*(பொழிப்புரை) சோலைகளில் உள்ள மரங்களின்மீது படிந்து தங்கியுள்ள மேகங்களின்மீது பாய்ந்து இணையற்ற அழகுடைய மயில் தன் இறகுகளை விரித்து ஆடுகின்ற தோற்றம் சுவர்க்க போகத்தை உடையவனாகிய தேவேந்திரன் கோவில் பாளையத்தின் எழிலை (மனத்திற்குக் காணப்படும் பொருளின் தன்மையாகிய) அறிவை ஊட்டுகின்ற எல்லாக் கண்களாலும் பார்த்தறிந்து மகிழ்ச்சியால் ஆடுவதை நிகர்க்கும்.*

*மஞ்ஞை ஆடு இயல் பொலிவு இந்திரன் ஆடிடல் சிவணும் என்பது பொருள் முடிபு. நீல மேனி மயில் இந்திரனுக்கும், தோகையின் கண்கள் அவனுடைய ஆயிரம்கண்களுக்கும் உவமை. மயில் முகில்மீது பாய்ந்துள்ள தோற்றம் மேகவாகனத்தின் மீதுள்ள இந்திரனுக்கு நிகர். மயில் ஒரு நிமிடம் கூட அசையாமல் இருக்காது; எப்போதும் அசைந்தாடிக் கொண்டே இருக்கும். இச் செயல் ஊரின் அழகைக் கண்ட ஆனந்தத்தால் இந்திரன் ஆடுவதாகக் கூறப்பட்டுள்ளது நல்ல கற்பனை.*

58. பதுமம் ஏந்திய சங்கங்கள் நாம்இதன் பாலே
கதும்என் றூர்தல்எப் பான்மையால் என்றுளம் கருதிப்
புதுமை மாதர்தம் நடைக்குடை பொலஞ்சிறை அன்னம்
பதுமை ஒத்தகன் றிடநிலைத் திடமனம் பற்றா. (5)

*(பொழிப்புரை) – தாமரை மலர்களால் தாங்கப்பெற்றுள்ள (பறவைக்) கூட்டமாகிய நாம் இம்மலர்களில் வேகமாக இயங்குதல் எப்படி என நினைத்து, எப்பொழுதுமே புதுமை குறையாத எழிலை உடைய மகளிரின் நடையழகிற்குத் தோல்வியுற்ற அழகிய இறகுகளை உடைய அன்னப் பறவைகள் சிலைகளைப் போலத் தம் இடத்திலிருந்து நகரவும் இயலாமல் அங்கேயே இருக்கவும் மனம் துணியாமல் தடுமாறின.*

*ஏந்திய என்புழி ஏந்தப்பட்ட எனச் செயப்படு பொருளில் ஆட்சி. அன்னம் உளம் கருதி அகன்றிட(வோ) நிலைத்திட(வோ) மனம் பற்றா என்பது பொருள் முடிபு.*

59. வன்னி, சந்தனம், வில்வம், மந்தாரம், நீள் மருதம்,
கன்னி காரம், சண்பகம், குருந்தம், துணர்க் கடம்பு,
பொன்னில் அம்கணிக் கொன்றை, பாதிரி, குரா, புன்னை
மன்னி டும்செழும் காவினம் மலர்ந்துதேன் வடிக்கும். (6)

*(பொழிப்புரை) வன்னி, சந்தனம், வில்வம், மந்தாரம், உயர்ந்த மருதம், கோங்கு, சண்பகம், நாரத்தையில் ஒரு வகையாகிய குருந்தம், மலர்க் கொத்துக்களை உடைய கடம்பு, தங்கத்தைப் போன்று அழகிய பூங்கொத்துக்களை உடைய கொன்றை, பாதிரி, குரவம், புன்னை முதலிய மரங்கள் நிறைந்துள்ள வளம் மிக்க சோலைகளில் மலர்கள் மலர்ந்து தேனைப் பொழியும். கணி – கண்ணி.*

60. அழற்று வேனிலால் இளைத்தருந் தாகம்மிக் கமைதன்
நிழல்து தைந்தவர்க் காலகா லேசுரன் நிமலக்
கழல்து ணைக்கண்நெஞ் சமைந்தவர் ஆம்எனக் கலந்து
சுழற்று வெம்மைபின் அணைதரா தாற்றும்தண் சோலை. (7)

*(பொழிப்புரை) சுடுகின்ற கோடையால் சோர்வடைந்தும், தாங்க முடியாத நீர் வேட்கை மிகுந்தும், பொருந்தியுள்ள தன்னுடைய நிழலில் வந்தடைந்தவர்களுக்குக் குளிர்ந்த பொழில்கள் – காலகாலேசப் பெருமானின் இரு திருவடிகளைத் தம் விழிகளிலும் உள்ளத்திலும் பதியப் பெற்ற அடியார்கள் வினையின் கொடுமை மறுபடியும் எய்தாமல் இருப்பதைப் போல – மீண்டும் வெப்பம் தாக்காமல் ஆறுதலை அளிக்கும்.*

*தன் அமை நிழல் என்க, தன்பால் பொருந்திய நிழல்.*

61. படைய யின்றிடும் வீரரும், தானமாப் பகட்டின்
இடையில் இந்திரர் எனச்செலுத் துநர்களும், இவுளி
நடைப யிற்றிடும் வீரரும் தீரத்தில் நண்ணும்
புடைந கர்ப்பெரு வளம்முடித் திடைநகர் புகல்வாம். (8)

*(பொழிப்புரை) ஆயுதப்பயிற்சி பெறும் வீரர்களும், மதம் பொழிவதும் பெரியதும் ஆன ஆண் யானையின்மேல் இவர்ந்து இந்திரனைப் போலச் செல்லுபவர்களும், குதிரைப் பயிற்சி அளிக்கும் சேவகர்களும் பெருமிதத்தோடு பொருந்தியுள்ள புறநகர்ச் சிறப்பை முடித்துக் கொண்டு இடை நகர வளத்தைக் கூறத் தொடங்குவாம்.*

## *இடை நகர்*

### *(அறுசீர் விருத்தம்)*

62. அந்தரம் மறைக்கும் காவும், அணிமலர்த் தடமும், பாங்கர்
சுந்தரப் புளின மும்சீர் துதைந்தசெய் குன்றும் என்னும்
அந்தம்ஆர் இடங்கள் கண்டோர் அகம்விழி கொள்வ தாய்நல்
மைந்தர்ஆ டவர்கள் ஆட வயின்வயின் வயங்கும் மாதோ. (9)

*(பொழிப்புரை) வானத்தை மறைக்கின்ற சோலைகளும், அழகிய தாமரைக் குளங்களும், அருகே நிறைந்துள்ள அழகிய பறவைக் கூட்டங்களும், சிறப்புடைய செயற்கை மலைகளும் என உள்ள எழில் மிக்க இடங்கள் பார்ப்பவர்களின் உள்ளத்தையும் விழிகளையும் கொள்வதாகவும் நல்ல அழகினைப் பெற்ற மகளிரும் வாலிபர்களும் களித்தாடும் பகுதியாகவும் ஆங்காங்கு விளங்கும்.*

*புளினம் மணற் குன்று ஆகாதோ எனில் அது நெய்தலுக்கே சிறப்புடைமை ஆதலானும், செய் குன்று தனியாகக் கூறப்பட்டுள்ளதாலும் புள் இனம் என் கொள்ளப் பெற்றது – சோலையிலும் நீர் நிலையிலும் அவை நிறைந்திருத்தல் இயல்பாதலின். நல் மைந்தர் என்பதற்கு நல்ல அழகினை உடையவர் எனக் கொண்டு மகளிர் என உரைக்கப் பெற்றது. என்னை?*

*"விஞ்சை வல்லவர் படைஎலாம் விறந்துமே வாதார்*
*நெஞ்சு துட்கெனும் படை நகர் வளம்நிகழ்த் தினம்; மேல்*
*அஞ்சில் ஓதியர் ஆடவ ரொடு மதன் அமர்த்தல்*
*எஞ்சு றாதபா சறைஎனும் இடைநகர் மொழிவாம்"*

*(தணிகைப் புராணம்– திருநகரப்34)*

*என்பது இலக்கிய மரபாதலின்.*

63. வேனிலால் வெதும்பித் தானம் வேட்டவர்க் கேவ லாளன்
தானிட வரும்முன் இன்பத் தையலர் தலைவர் ஆவோர்
மேனிலை மாடத் தும்பர் விசிறிய சிவிறித் தூநீர்
மேனிதோய்ந் தெறிபூண் சுண்ணம் மிடிஅறப் போக்கும் அன்றே. (10)

*(பொழிப்புரை) வெப்பத்தால் வருந்திச் சற்று ஒதுங்க நிழலான இடம் கேட்டவர்களுக்குப் பணியாளர்கள் இடம் தருவதற்கு முன்பே, அந்த வீட்டுத் தலைவனும் தலைவியும் மேல்மாடியிலிருந்து ஒருவர் மற்றவர்மேல் நீர் எறிகுழலால் பீச்சிக் கொள்ளும் பன்னீரும் வாசனைப் பொடியும் படிந்து குளிர்ச்சிக்கான சாதனங்கள் இல்லாத வறுமையை இல்லாமல் செய்துவிடும்.*

*தானம் – இடம், நிழலில் தங்குவதற்கான இடம். எறி பூண் சுண்ணம், எறிகின்ற அணிதற்குரிய வாசனைப் பொடி, பூண் சுண்ணம் என்னும் வேற்றுமைத் தொகைத் தொடர் ஒரு சொல் நீர்மைத்தாக நின்று, எறி பூண் சுண்ணம் என வினைத்தொகை ஆயிற்று, பூண் முதனிலைத் தொழிற்பெயர்.*

64. நீடும்மாக் காமர் மிக்க நேரிழை யார்க்கம் மானை
ஆடுவான் கொடுத்து, வேர்வை அரும்பச்செய் தெழில்காண் பார்போல்
கூடுயிர்ச் சித்தி ரத்தில் குலாம்அவர் கோலம் கண்ணால்
நாடுவார் உயிர்ப்பற் றோவன் நாட்டுசித் திரம்ஒப் பாரால். (11)

*(பொழிப்புரை) மிகச் சிறந்த அழகியரை அம்மானை ஆடச் செய்து, அவர்கள்மீது குறுவேர்வு அரும்புவதன் அழகை ரசிக்க விரும்பி அத்தகைய மகளிரின் ஓவியத்தை வரைந்து அதன் அழகில் ஈடுபட்டுப் பார்ப்பவர்களும் சிலையாகச் சமைந்து நிற்பர்.*

*அழகான பெண்கள் அம்மானை ஆடும்போது அவர்கள்மேல் குறுவெயர்வு அரும்பும் காட்சியை ரசிக்க விரும்பியவர்கள் அதனை ஓவியமாக வரைந்தனர். அச் சித்திரத்தின் எழிலில் மயங்கி அதைப் பார்த்தவர்கள் எல்லாம் ஓவியமாக அசைவற்று நின்றுவிட்டனர்.*

65. நங்கையர் கையில் பந்து நல்குபு மைந்தர் ஈதுஉம்
கொங்கையின் மிக்க தென்னக் கோபம்நாண் அமைந்து வல்லே
தங்கையில் கொண்டடிக்கும் ததிஉவ மேயம் மானம்
சங்கைதீர்ந் துணர்ந்தன் னோரில் தாமும்மேல் புடைப்பர் மன்னோ. (12)

*(பொழிப்புரை) பெண்களின் கையில் விளையாடப் பந்தைக் கொடுக்கும் வாலிபர்கள் இப்பந்தும் உங்கள் நகில்களைப் போன்றே சிறந்தது எனக் கூற அதனால் சினமும் வெட்கமும் கொண்ட மகளிர் அதனைக் கையில் வாங்கி வேகமாக அடிக்கும்போது உவமிக்கப்படும் பொருளையும் உவமையையும் ஐயம் தீர உணர்ந்து தாமும் பந்தினை அடிப்பர்.*

*பந்து நகில்களுக்கு உவமை கூறப்படினும் உபமேயம் உவமையை விடச் சிறப்புடையது என வாலிபர்கள் அறிந்துகொண்டார்களாம். அதனால் சிறப்பற்ற பந்தினை அடித்தனர் என்பது கருத்து.*

66. அயில்புரை உண்கண் மாதர் அமைபொழில் இருளை முற்றும்
வெயில்விடு மணிப்பூண் வாங்க மேவினர்; மதலைத் தீஞ்சொல்
குயில்கள்அஞ் சுகங்கள் வாங்கக் கோடிய யாழ்கைக் கொண்டு
பயில்வர்இன் னிசைஅ தற்கும் பயிற்றுவர் ஒப்ப மாதோ. (13)

*(பொழிப்புரை) வேலை நிகர்த்த கூர்மையைப் பெற்றதும் மை பூசப் பெற்றதும் ஆகிய விழிகளை உடைய பெண்கள் மலர்ச் சோலைகளுக்குள் சென்றனர். மரங்களின் நெருக்கத்தால் இருள் அடர்ந்திருந்த அப்பொழில்களுக்கு அம் மகளிர் அணிந்திருந்த நவரத்தின ஆபரணங்கள் ஒளி ஊட்டின. அவர்கள் வளைந்த யாழைக் கையிலேந்தி அச் சோலையில் உள்ள குயில்களும் கிளிகளும் கேட்கும்படி இசைத்தனர். இச் செயல் அப் பறவைகளுக்கு இன்னிசை கற்றுத் தருவதைப் போல இருந்தது.*

67. மாகநாட் டிமையோர் உள்ளம் மருளமங் கையர்கள் மைந்தர்
போகம்ஆர் இடைந கர்ச்சீர் புகன்றமட் டடக்கி, விண்சார்
மேகம்ஆர் புனல்(த்) தரங்க வேலைநேர் அகழி யின்சீர்
நாகம்நேர் புரிசை சால்உள் நகர்வளம் சிறிது சொல்வாம். (14)

*(பொழிப்புரை) வானோர்களும் மயங்கும்படி ஆடவரும் மகளிரும் இன்பந் துய்க்கின்ற இடை நகரின் சிறப்பை இந்த அளவில் நிறுத்திக் கொண்டு, வானத்தில் உள்ள மேகங்களால் மொள்ளப்படும் நீரையும் அலைகளையும் உடைய கடலைப் போன்ற அகழியின் அழகையும், பாம்பைப் போன்ற மதில்களையும் உடைய உள் நகரத்தின் வளப்பத்தைக் கொஞ்சம் சொல்லுவாம்.*

*மதிலுக்குப் பாம்பு உவமை:*

மாகம் முந்திய சுடிமதில் மதுரைநா யகர் கைந்
நாகம் என்பதே தேற்றம்; அந் நகர்மதில் விழுங்கி
மேகம் நின்றசை கின்றதங் வெஞ்சினப் பணிதன்
ஆகம் ஒன்றுதோல் உரிபட நெளிவதே யாகும்.

*(திருவிளையாடற் புராணம், திருநகரச் சிறப்பு 19)*

## உள் நகர்

### (எழுசீர் விருத்தம்)

68 மாதவப் பெருக்கால் காலகா லேசன்
வளர்கரு ணாகர வல்லி
பாதபங் கயங்கள் பணிஅடி யவருள்
பதிபெரும் காதலின் திறம்போல்
பூதலத் தவர்கட் புலன்அள வறியாப்
புரிசையின் மீதுகண் டவருள்
ஆதரம் பொலியப் பிரமத கணங்கள்
அணிஅணி யாய்அமைந் திடுமால். (15)

*(பொழிப்புரை) கால காலேசப் பெருமான் கருணாகர வல்லி ஆகியோரின் திருவடிகளை வழிபடுவதையே தம் தவமாகக் கொண்டுள்ள அடியார்களின் மனத்தில் அவை கருணையோடு நிலைத்திருப்பதைப் போல, உலகத்தவர்களின் கண்களுக்கு எட்டாது உயர்ந்துள்ள மதிற்சுவரின்மேல் கயிலாயத்தில் உறைகின்ற சிவனடியார் திருக் கூட்டம் வரிசைவரிசையாகப் பொருந்தியிருக்கும்.*

*உள்ளத்தில் இறைவனடி பதிந்திருப்பதைக் கண்களால் காணமுடியாது; உணரவே இயலும். மதிலின் உயரமே கண்களுக்கு எட்டாதபோது பிரமத கணங்களை எவ்வாறு பார்க்க முடியும்? அநுமானத்தினாலேயே அறிய முடியும். இதுவே உவமை.*

69. கோயிலம் பதிஎன் றிசைபெயர்க் கேற்பக்
குலவுசீர்ப் புரிசையின் மேல்ஆர்
ஞாயிலின் குலமே நோக்குநர் உளத்தஞ்-
ஞானமாம் பகைஅற நசித்துத்
தாயியற் கருணா கரக்கொடி இடத்தில்
தழைத்தவிர் காலகா லேசன்
தூயியற் சேவை கண்டிசை ஞானத்
துணைவிழி நல்கிடும் அம்மா. (16)

*(பொழிப்புரை) கோயில்பாளையம் என்னும் தன் பெயருக்குத் தக்கபடி இவ்வூரின் மதிலின் மேல் அமைந்துள்ளதாகிய காவலாளிகள் மறைந்திருந்து தாக்கும் சூட்டு என்னும் உறுப்புக்களே தம்மைப் பார்த்தவர்களின் அறியாமையைப் போக்கி அருள்மிகு கருணாகரவல்லியுடனமர் காலகாலப் பெம்மானின் தரிசனத்திற்கான ஞானக்கண்ணை அளிக்கும்.*

*ஞாயில் என்னும் கூண்டுகள் வீரர்கள் வெளியில் இருந்து தாக்கும் பகைவர்களின்மீது படைக் கலங்களை எறிந்துவிட்டு மறைந்து கொள்ளும் உச்சிப் பகுதி ஆகும். இவை வெளியிலிருந்து பார்ப்பவர்கட்கு ஒரு சிறு கோயிலையோ சிவலிங்கத்தையோ நினைவுபடுத்துவதால் ஞானக்கண்ணைத் தரும் என்கிறார். இது இவ்வடிவ முடையதை, "பன்மணி பயின்ற ஒண் முகட்டு உச்சி நலத்தகு ஞாயில் இலக்கண இளமுலை" (3:323–24) என்னும் பெருங்கதைப் பகுதியால் அறியலாம்.*

70. சத்தத்தில் பரிசத் தினில்உரு வத்தில்
தகுசுவை மணம்இவை தம்மில்
சித்தத்தைக் கவரும் பொருள்முழு தமைந்து,
சேர்கரா இனங்கள்உள் அடக்கிப்
பைத்தத்து விடம்ஆர் சேடன்நீள் உச்சி
பதிமணி மேற்கிடந் தமைந்தோர்
வித்தத்தைக் கவரும் வேசையர் உளம்போல்
மிக்கஆழ்ந் தகன்றதால் அகழி. (17)

*(பொழிப்புரை) ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என ஐம்புலன்களுக்கும் உரிய இன்பத்தை முற்றுமாகப் பெற்று, தன்பால் கொடிய முதலைகளை (வஞ்சகத்தை) மறைத்துக்கொண்டு நச்சுப்பையில் நிறைந்துள்ளதும் மற்றவர்க்கு அபாயத்தை அளிப்பதும் ஆகிய நஞ்சினை உடைய ஆதிசேஷனின் தலையில் உள்ள நாகமாணிக்கம்வரை ஆழம் அமைந்து (அராப்படம் போன்ற உறுப்பில் மணியின் சிறப்பமைந்து) அகழி காமுகர்களின் பொருள்களைக் கவரும் விலைமகளிரின் உள்ளம் போல ஆழ்ந்தும் அகன்றும் உள்ளது.*

*இப் பாடல் கச்சியப்ப முனிவரின், "பெருவ னப்பினால் துழனியால் சுவையினால் பெருகிய மணத்தால் எவ் உருவும் இன்புறும் ஊற்றினால் மலர்க் கரங் கோடரித் தடங்கண்ணார் பொருவ ஐவகைப் பொறிகட்கும் நுகர்ச்சியாய்ப் பூவையர் உளமே போல் மருவு வஞ்சமும் கொடுமையும் ஆழமும் வரம்புறக் காட்டாதால்" (பேரூர்ப் புராணம், திருநகரப். 36) என்னும் விருத்தத்தின் எதிரொலி.*

*அகழியிலுள்ள மலர்களால் ஊறு, ஒளி, சுவை (தேன்), நாற்றம் என நாற்புலன் இன்பங்களும், அங்குள்ள பறவைகளால் ஓசையின்பமும் கிட்டுகின்றன.*

71. மாடமீ தணியார் கொடிக்குலம் அசையும்
மாட்சிதென் திசைமற லியை, "நின்
தோடம்நீக் கியமெய்க் காலகா லேசன்
துணைஅடி தொழுதுபே றுறத்தென்
நாடமை நிரயத் துயிர்த்திர ளுடனே
நண்ணுதி; புண்ணியர் ஆக்கி
வீடமைத் திடலாம்" என்றழைத் திடும்மெய்
விம்மிதம் காட்டுவ அம்மா! (18)

*(பொழிப்புரை) மாடங்களின்மேல் அழகிய கொடிகள் அசையும் காட்சி தென்திசைக் காவலனாகிய இயமனைப் பார்த்து, "உனக்குற்ற குறையைப் போக்கிய காலகாலேசப் பெம்மானின் திருவடிகளை வணங்கி விரும்பிய பயனைப் பெறத் தெற்குத் திசையில் உள்ள நரகத்தில் வாழும் உயிர்க் கூட்டங்களுடனே வா; எல்லோரையும் நல்வினையாளராக்கி முக்தியில் உறச் செய்யலாம்" என அழைப்பதைப் போன்று வியப்பளிக்கிறது.*

72. சண்டன்ஆம் பெயர்தன் போல்பெறு நமன்முன்
சாபம்நீங் கப்புரி நீல
கண்டன்ஆர் கோயில் நம்பரம் பரையில்
கட்டுதும் எனக்கரி கால்(ப்)பேர்
கொண்டவன் புரியக் கண்டுகண் டுள்ளம்
குளிர்ந்துதன் கரம்சிரம் பதித்தல்
எண்டரும் என்கான் முளைகள்துன் படையாது
இரட்சிஎன் றினன்தொழல் போலும். (19)

*(பொழிப்புரை) தன்னைப் போலவே சண்டன் என்று ஒரு பெயரையும் பெற்றுள்ள இயமனுடைய சாபத்தை நீக்கிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஆலயத்தைத் தன் மரபில் தோன்றிய கரிகாற்சோழன் திருப்பணி செய்வதைப் பார்த்து, மனம் மகிழ்ந்து, தன் கதிர்களையும் தலையையும் பொருந்துதல் மதிக்கத்தக்க தன் வமிசத்தோரைக் காப்பாற்றுக என்று சூரியன் வணங்குவதை நிகர்க்கும்.*

*சண்டன் – சூரியன், நமன் இருவருக்கும் பெயர். சோழ மன்னர்களைச் சூரியவம்சம் எனல் கவிமரபு. "மன்னி நீடிய செங்கதிரவன் வழி மரபின் தொன்மையாம் முதற் சோழர்" (அதிபக்தர் 1). என்பார் சேக்கிழார் பெருமான். கான் முளைகள் – மரபில் உதித்தோர். இனன் – சூரியன்.*

73. இந்தனம் என்ன உதித்திடும் தருவை
எரிக்கும்தீ எனஎழும் மயலால்
நொந்தனங் காட்டில் உழல்விடர் களின்கண்
நோக்கிடும் ஆடல்பா டலினால்
தந்தனம் பணத்தால் அவர்தனம் பணங்கள்
தாங்கொடு மிடிபிணி ஈந்து
வந்தனம் அவர்பால் பெறும்விலை மகளிர்
வாழ்தரு சேரியும் உளதால். (20)

*(பொழிப்புரை) மரத்தைக் கடைவதால் தோன்றி அதையே எரித்துச் சாம்பலாக்கும் தீயைப் போலத் தான் தோன்றும் மனித உடல்களையே கொதிக்க வைக்கும் காமத்தால் வருந்தி, எப்போதும் காமக் களியாட்டங்களிலேயே போது போக்குகின்ற காமுகர்கள் விரும்பிப் பார்க்கும் ஆடல் பாடல்களாலும் தம்முடைய நகில்களாலும், அரவப்படம் போன்ற உறுப்பாலும் மயக்கி, அவ்விடர்களின் செல்வங்களையும் பணத்தையும் கவர்ந்துகொண்டு, அவர்களுக்கு வறுமையையும் நோய்களையும் கொடுத்தும், அக் காமுகர்களின் பாராட்டைப் பெறுகின்ற விலை மகளிர் வாழ்கின்ற பரத்தையர் சேரியும் அவ்வூரில் இருந்தது.*

*தமக்குத் தீமை புரிவதை உணர்ந்தும் காமுகர் விலை மகளிரை விரும்புதல் : "உடம்பு பிணியால் இறவு குற்றறம் இகந்து மடம்பட உளம்பொருள்கள் மற்றும் உகுமாற்றால் விடம்புரையும் வேசையர் விழைச்சென உணர்ந்தும் உடம்படுவர் என்னில் அவர் உய்க்கும் நலன் எற்றே?" (தணிகைப் புராணம், திருநகரப். 80)*

74. மலையிடத் தமைந்த பொருள்களும் முல்லை
வயின்உறு பொருள்களும் ஒலிஆர்
அலையிடத் துள்ள பொருள்களும் வயற்கண்
அமைந்தபப் பொருள்களும் நிறைந்தே
விலையிடற் கரிய வாய்உல கெவற்றும்
மேவினோர் களும் கொள்வான் வரினும்
நிலையிடத் தினவாய் இலை எனப் புகலா
நெடுங்கடைத் தெரு அணி நிறையும். (21)

*(பொழிப்புரை ) மலைபடு பொருள்கள், முல்லை நிலப் பொருள்கள், கடல்படு திரவியங்கள், வயலில் விளையும் பொருள்கள் என்னும் எல்லாவற்றையும் குறைவறப் பெற்று, உள்ளே இருக்கும் சரக்குகளின் மொத்த மதிப்பு எவ்வளவு எனக் கணக்கிட இயலாததாக, உலகத்தின் எப் பகுதியிலிருந்து எவர் வந்து எதைக் கேட்டாலும் இல்லை என்று சொல்லாத நீண்ட கடைவீதிகள் வரிசையாக நிறைந்திருக்கும்.*

*(கலித்துறை)*

75. சகம்செய் நான்முகன் றனக்கெதி ராய்சரா சரம்சால்
சுகம்செய் காயங்கள் நல்குபு திரிசங்கு சொர்க்க
அகம்செய் சங்கற்பத் தாக்கிய கௌசிகன் அமைந்து
மகம்செய் நீற்றுமேட் டிசைசொலி முடிப்பதெவ் வாயே? (22)

*(பொழிப்புரை) உலகத்தைப் படைப்பவராகிய பிரமனுக்குப் போட்டியாக நிலைத்திணை இயங்குதிணைகளில் அடங்குகின்ற இனிய உடல்களைப் படைத்துத் திரிசங்கு மன்னனுக்காகப் புதிய சுவர்க்கம் ஒன்றையே உருவாக்கத் துணிந்த விசுவாமித்திரர் தங்கியிருந்து வேள்வி செய்த இடமாகிய திருநீற்று மேட்டின் பெருமையை யாரால் சொல்லி முடிக்க முடியும்?*

*திரிசங்கு சூரியவம்சத்தில் தோன்றிய ஓர் அரசன். இவன் தன் ஊன் உடலுடன் சுவர்க்கத்தில் புக விரும்பினான். இதற்குத் தன் குல குருவாகிய வசிட்டரை நாடினான். அவர் மறுத்ததால் திரிசங்கு ஆசிரியரைச் சினந்து கொண்டான். அதனால் வசிஷ்டர் திரிசங்குவைச் சண்டாளனாகச் சபித்துவிட்டார். அடுத்து அவன் விசுவாமித்திரரிடம் சென்று நடந்ததைக் கூறி உதவ வேண்டினான். உடனே அவர் அவனைத் தம் தவவலிமையால் மேலே அனுப்பினார். அப்போது தேவர்கள் சுவர்க்கத்தில் அவனை அனுமதிக்க மறுத்துக் கீழே தள்ளிவிட்டனர். தலைகீழாகக் கீழே விழும்போது விசுவாமித்திரர் அரசனுக்கு அபயம் அளித்து எல்லா உலகங்களையும் படைக்கத் தொடங்கிச் சுவர்க்கத்தையும் படைத்தார். இதுவே திரிசங்கு சுவர்க்கம் எனப்படுகிறது.*

76. கோலம் மேவும்முன் யுகங்களில் வெள்ளமேற் றொண்டு
ஞால மேல்பற்பல் வளம்புரி கௌசிக நதிதான்
சால உற்றதன் நீர்கலி யில்குறை தகையால்
சீல காலகா லேசன்ஓர் விடைஎனத் திகழும். (23)

*(பொழிப்புரை) கௌசிக நதி முதல் மூன்று யுகங்களில் அழகு மிகுந்தும், நீர்ப்பெருக்கு அதிகமாக உள்ளதாகவும், நாட்டை வளப்படுத்துவதாகவும் அமைந்திருந்தது. ஆனால் இந்தக் கலியுகத்தில் இப் பண்புகள் குறைந்து விட்டன. இந்தத் தன்மையால் கௌசிக நதி சிவபெருமானின் வாகனமாகிய நந்தியைப் போல விளங்குகிறது.*

*சிவபெருமானின் ஊர்தியாகிய ஆனேறு அறத்தின் வடிவம் ஆகும். "அறத் தெய்வதம் செங்கணான் ஏறதாய் ஓர் எழில் உருக் கொண்டதே" என்பது கந்த புராணம். (6:13:304) இந்தத் தரும விடை தன் கால்கள் நான்கில் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொன்று குறையக் கலியுகத்தில் ஒற்றைக் காலை மட்டும் பெற்று நிற்கும் என்பது மரபு. "ஓடிவிலா ஊழிதோ றொவ்வொன் றாகநல் அடி ஒரு மூன்றிழந் தண்ணல் நல்லறம் படிமிசை ஓர் பதம் பாவும்*

*பாலதாய் விடைஉருத் தாங்குபு மெலிந்து நின்றதால்" (செவ்வைச் சூடுவார் பாகவதம் 1-7-26). இந்தத் தருமத்தைப் போலவே கௌசிக நதியும் கலியுகத்தில் தன் வளம் குறைந்துள்ளது என்பது கருத்து.*

77. சீர ணம்படாத் தவத்தினர், புலவர்கள், சித்தர்,
ஆர ணத்திசை அங்கம்ஆ கமம்கொள்அந் தணர்கள்
தோர ணத்திரு மறுகமை கோயிலுள் துதைந்தே
பார ணங்குதுன் பறச்செய்செங் கோல்கொள்பார்த் திபரும் (24)

78. மட்டி லாப்பொருள் வாய்ந்துதா ரத்தகை மலிந்து
வட்டி ஏற்றிடற் கிச்சைஅற் றறம்கொள்வை சியரும்
கொட்டில் ஆன்நிரை பொலிதர உழுதொழில் குயிற்றி
முட்டி லாதவே ளாண்தகைக் குடிகளும் முயங்கும். (25)

*(பொழிப்புரை) குறையாத தவத்தை உடைய தபோதனர்களும், அறிஞர்களும், சித்தர்களும், வேதம் அதன் அங்கங்கள் ஆகமங்கள் ஆகியவற்றை ஐயமற்றுத் தம் மனத்தில் கொண்டுள்ள மறையவர்களும், கோபுர வாயிலுடன் கூடிய வீதிகளை உடைய அரண்மனையில் பொருந்தி உலக மக்களின் துயரத்தைப் போக்குகின்ற செங்கோல் மன்னர்களும், எல்லையில்லாத செல்வத்தைப் பெற்று ஈகைப் பண்பு மிகுந்து, வட்டித் தொகையை அதிகரித்துப் பெற விரும்பாதவர்களாய் அறநிலையில் நிலைத்துள்ள வணிகர்களும், மாட்டுத் தொழுவத்தில் கால்நடைகள் நிறைந்திருக்க, பயிர்த்தொழிலில் ஈடுபட்டு, தடை இல்லாமல் பிறருக்கு உதவி புரியும் தன்மையை உடைய வேளாளரும் இவ்வூரில் நிறைந்துள்ளனர்.*

79. இற்பு ரந்து,தம் கேள்வர்ஆம் உயிர்க்குமெய் இரண்டாய்ச்
சொற்பு ரந்தறம் பெருக்குபு, செல்வியில் துலங்கு
பொற்பும், பூமிநேர் பொறுமை,ஆர் குணங்களும் பொருந்தும்
கற்பு மங்கையர் பாரில்வாழ் கற்பகம் கடுப்பார். (26)

*(பொழிப்புரை) தம்முடைய இல்லத்தை எல்லா வகையாலும் பேணி தம் உயிரனைய கணவரின் இரண்டாவது உடல் போல விளங்கி, தம் குடும்பத்தின் புகழைக் காப்பாற்றி, இல்லறத்தைச் சிறப்புறச் செய்து, திருமகளைப் போல் விளங்குகின்ற மங்கலத் தன்மையும், நிலம் போன்ற பொறுமையும், பிற நற்பண்புகளும் வாய்க்கப்பெற்று கற்பிற் சிறந்த மகளிர் நிலஉலகில் உள்ள கற்பக மரம் போன்று வேண்டியதை அளிக்க வல்லவர் ஆவர். அத்தகைய பெண்கள் கோவில் பாளையத்தில் நிறைந்திருந்தனர் என்றவாறு.*

*"இல்லது என் இல்லவள் மாண்பானால்" என்பதை நினைந்து பாரில் வாழ் கற்பகம் கடுப்பார் என்றார்.*

80. படிம ணந்திடும் படிஅவ தரித்தருட் பரன்பொன்
அடிம ணந்திடும் உளத்தவத் தினர்பிச்சை அளிப்பார்
குடிம ணந்திடப் போதலில் தெருத்தொறும் குளிர்தாள்(ப்)
பொடிம ணந்திடும் புனைபவர் பவம்அறப் பொடிப்ப. (27)

*(பொழிப்புரை) உலகில் புகழ் பரவுமாறு தோன்றி, இறைவனின் திருவடிகள் பதிந்த மனத்தினராகிய தவசிகள் தமக்கு ஒரு வேளை உணவு அளிப்பதால் அந்த இல்லறத்தாரின் குடி விளங்கவேண்டும் என்னும் கருணையினால் – பிச்சைக்குச் செல்வதால் வீதிகளில் எல்லாம் அத் தவசிகளின் பாததூளிகள் – அணிபவரின் பிறவி ஒழியும்படி – பரந்திருக்கும்.*

*படி – உலகம். தவசிகள் ஏற்று அருந்துவது இல்லறத்தார் புண்ணியம் பெற வேண்டும் என்பதற்காகவே என்பது கருத்து. "பகரும் ஞானி பகல்ஊண் பலத்துக்கு நிகர் இலை என்பது நிச்சயம் தானே" (திருமந்திரம் 1860) என்னும் தமிழ் ஆகமத்தை நினைந்து கூறியது.*

81. தருமச் சாலையும் ஓமத்தின் நறும்புகை தவழ்சத்
கருமச் சாலையும் மோனம்உற் றமைந்துயோ கம்செய்
மருமச் சாலையும் கனிரசம் கள்மலர் மணம்தோய்
துருமச் சாலையும் மாடவீ திகள்தொறும் துலங்கும். (28)

*(பொழிப்புரை ) இரவலர்க்கு வேண்டுவனவற்றை வழங்குகின்ற தருமச் சத்திரங்களும், வேள்வியின் நறுமணப் புகை பரவுகின்ற நற்சடங்குகள் நடைபெறும் இடங்களும், மௌனத்தில் நிலைத்து நின்று யோகம் பயில்வாரின் பயிற்சிக் கூடங்களும், பழச்சாறும் தேனும் மலர்களும் மணக்கின்ற மரங்கள் நிறைந்த சோலைகளும் பெரிய மாடி வீடுகள் நிறைந்துள்ள வீதிகளில் எல்லாம் பொலிவுடன் காணப்பெறும்.*

*யோகம் பயிலுமிடத்தில் என்ன நடைபெறுகிறது என்பது பாமரர்களுக்குத் தெளிவாகத் தெரியாது; ஆகலின் மருமச் சாலை என்றார்.*

*(கலி விருத்தம் அடிமடக்கு)*

82. பண்ண வர்க்கு பரிகைக ளாற்றுமே
பண்ண வர்க்கு பரிகைக ளாற்றுமே
வண்ணம் பாவலர் வாய்களின் வாசமே
வண்ணம் பாவலர் வாய்களின் வாசமே. (29)

பண்ணவர்க்கு உபரிகைகள் ஆற்றும். ஏ.
பண்ணவர்க்கு பரிகைகள் ஆற்றுமே?
வண்ணம் பாவலர் வாய்களின் வாசம். ஏ.
வண்ணம் பாவுஅலர்வாய் களின் வாசம். ஏ.

*(பொழிப்புரை) ஆகாயத்தில் இயங்குகின்ற தேவர்களை மேல்மாடங்கள் களைப்பு நீங்கச் செய்யும். (அதன்மேல் தங்கி ஓய்வெடுப்பர் என்றவாறு.) போர் வீரர்களை மதிலின்மேல் உள்ள மேடைகள் தாங்குமோ? (வீரர்களின் தொகை பெரிது என்றபடி.) புலவர்களின் வாயில் எப்போதும் வண்ணப் பாக்கள் வசிக்கும். (வண்ணம் பாடுவர் என்பது கருத்து.) நல்ல நிறத்தைப் பரப்புகின்ற மலர்களிடத்தே தேனின் நறுமணம் இருக்கும்.*

*பண்ணவர்க்கு என்புழி இரண்டு அடிகளிலும் வேற்றுமை மயக்கம்; நான்கன் உருபு இரண்டன் பொருளில் வந்தது. பாவு அலர் – பிறவினைப் பொருளில் வந்த வினைத்தொகை. களின் – கள்ளின், இடைக்குறை. இரண்டாம் அடியின் ஏகாரம் வினா; ஏனைய அசை.*

83. தங்க ரத்தினஞ் சாரப் பணிகளே
தங்க ரத்தினஞ் சாரப் பணிகளே
சங்க மங்களந் தாரணி யேற்றமே
சங்க மங்களந் தாரணி யேற்றமே. (30)

தம் கரத்தில் நஞ்சுகள் ஆர் அ பணிகளே
தங்க ரத்தினம் சார் அ பணிகள். ஏ.
சங்கமங்கள் அம் தாரணி ஏற்றம். ஏ.
சங்கம் அங்கு அளந்தார் அணி ஏற்றம். ஏ.

*(பொழிப்புரை) சிவபெருமானுடைய கைகளில் விடம் பொருந்திய அந்தப் பாம்புகள்தாம் பொன்னும் மணிகளும் சேர்ந்த அழகிய நகைகள் ஆகும். சிவனடியார்கள் அழகிய உலகில் மிக மேன்மை உடையவர் ஆவர். தமிழ்ச் சங்கம் ஆகிய அவ்விடத்தில் தமிழ் அகப்பொருள் இலக்கணத்தை வரையறுத்த சிவபெருமானின் பெருமை பொருத்தமானதே ஆகும்.*

*அ – முதலடியில் பண்டறி சுட்டு; இரண்டாமடியில் அழகிய. தங்க ரத்தினம் – உம்மைத் தொகை. தமிழ்ச் சங்கத்தாருக்கு இறையனார் அகப்பொருள் அளித்த வரலாறு வெளிப்படை. ஏகாரம் முதலடியில் பிரிநிலை; ஏனைய அசை.*

84. முத்த மிழ்த்து முதுகலைச் சங்கமே
முத்த மிழ்த்து முதுகலைச் சங்கமே
வித்தங் கொட்டிடு மேன்மை நன் செய்கையர்
வித்தங் கொட்டிடு மேன்மை நன் செய்கையர் (31)

மு தமிழ்த்து முதுகலை சங்கம். ஏ
முத்து அமிழ்த்தும் முது கலை சங்கம் மே -
வித்தம் கொட்டு இடு மேன்மை நன் செய்கையர்
வித்தம் கொட்டிடும் மேல்மை நன் செய்கையர்

*(பொழிப்புரை) பழமையான மொழியை ஆய்கின்ற கல்விக் கழகம் இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ்களை உடையது. நித்திலங்கள் பதிக்கப் பெற்ற முழுமையான ஒளி வீசுகின்ற வளையல்களைப் பொருந்தி (அணிந்து கொண்டு) காலப்பிரமாணத்தோடு தாளம் போடுகின்ற சிறப்பு வாய்ந்த நல்ல சிவந்த கரங்களை உடையவர்கள் (இவ்வூர் மகளிர்.) தம் பொருள்களை எல்லாம் வாரி வழங்கிடுகின்ற வானிடத்து மேகத்தைப் போன்ற நற் செயல்களை உடையவர் (இவ்வூர் மக்கள்).*

*தம் என்னும் சொல் மூன்றாம் அடியில் பங்கிடுதல் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. தாளம் என்பது காலப்பங்கீடு ஆதலின் காலப் பிரமாணத்தோடு எனப் பொருள் காணப்பெற்றது. தம் என்பதை இசைக் குறிப்பாகக் கொண்ணினும் ஆம். ஈற்றடிக்கு, பொருட் செல்வத்தை நிறையத் தருகின்ற சிறப்பாகிய நலத்தைப் பெற்ற தொழில்களை (அல்லது வேளாண்மையை) உடையவர் எனினும் பொருந்தும்.*

### திருக்கோயில்

*(கலித்துறை)*

85. படைத்தல் காத்திடல் அழித்திடல் உறுதிரோ பவத்தில்
அடைத்த லால்துயர் மிகும்உயிர்த் திரள்களுக் ககந்தை
துடைத்து நான்விடை கொடுப்பன்என் றோதிடு தொழில்போல்
விடைத்த னிக்கொடி காலகா லேசன்முன் விளங்கும். (32)

*(பொழிப்புரை) தனு கரண புவன போகங்களை உண்டாக்கல், உலக உயிர்களைப் பாதுகாத்தல், உரிய காலத்தில் இறக்கச் செய்தல், இறந்த காலம் எதிர்காலம் ஆகியவற்றை மறைத்தல், இறுதியில் ஆணவத்தின் வலிமையை ஒடுக்கி அருளுதல் என்னும் பரம்பொருளுக்குரிய ஐந்து தொழில்களையும் நானே செய்வேன் எனக் கூறுவது போலக் காலகாலப் பெருமானின் திருமுன்னர் ஏற்றுக்கொடி தோற்றமளிக்கும்.*

*விடையாகிய நந்தியையும் சிவபெருமானகவே பாவித்தல் சைவ சம்பிரதாயம். சிவபெருமானுக்கே நந்தி என்று ஒரு பெயர் உண்டு. நந்தி மகன் என விநாயகரைக் குறிப்பிடுவார் திருமூலர். அது மட்டும் அல்லாமல் சைவ சித்தாந்தத்தின் முதல் குருநாதர் நந்தியம் பெருமானே. குருவே பரம் என்னும் கௌமார சித்தாந்தம் பற்றித் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் இவ்வாறு கூறியது மிகப் பொருத்தமானது.*

86. சேத னத்தகை தீர்நெல்லாய்ச் செனித்த தான் திருத்த-
போத னர்க்கொளும் காலகா லேச்சுரன் புசிநை
வேத னத்திறம் பெறும்தகை தூமத்தால் விளங்கப்
போத னம்சுரர்க் கோதல்போல் விண்பதி புகுத்தும். (33)

*(பொழிப்புரை) அறிவு இல்லாத (அசேதனம் ஆகிய) நெல்லாகத் தோன்றிய நான் தெய்வீகமான தவசிகளை ஆட்கொள்கின்ற காலகாலேசப் பெருமான் ஏற்றருளுகின்ற படையல் ஆகிய பாக்கியத்தை (சமையலின்) புகையால் தேவர்களுக்குத் தெளிவாக அறிவுறுத்துவது போலப் புகையை வானத்தில் பரவச் செய்யும். தபோதனர்களை ஆட்கொள்ளும் பெருமான் அறிவற்ற நெல்லாம் தன்னையும் நிவேதனமாக ஏற்ற தகைமையைப் புகையால் வானுலகத் தேவர்களுக்கு அறிவிப்பதைப் போல நெல் புகையைப் பரப்புகிறது என்பது கருத்து. நெல் ஆகிய முதல் நிலையைக் கூறினாலும் அரிசி ஆகிய பின் நிலையே கருத்து; என்னை? அரிசியே சோறு ஆதலின்.*

*சைவ சாத்திர நூல்கள் நெல்லின் உமியை மாயைக்கு உவமை கூறும். மாயையிலிருந்து விடுபட்ட உயிர் இறைவனால் ஆட்கொள்ளப்படும் என்பதை உமியை நீங்கிய அரிசி நிவேதனம் ஆம் செயல் காட்டுகிறது. புலன் இன்பங்களையே மேலானதாகக் கருதி அம்மாயையில் மூழ்கியுள்ளவர்கள் சுவர்க்க லோக வாசிகள். நெல் உமியை நீத்து அரிசியாகி இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற தன்மையை மாயையில் உழலுகின்ற தேவர்களுக்கு உணர்த்துவதைப் போல அட்டிற் சாலைப் புகை வானில் பரவுகிறது என்பது சாத்திர சாரம் மிக்க ஆழமான கற்பனை. போதனம் – உபதேசம்.*

87. தாள்அ ளித்தருள் காலகா லேசன்சந் நிதியில்
வாள்அ விர்ந்திடும் திருவிளக் கெண்இல வயங்கல்
கோள்அ மைந்தஎம் இறையைஒத் தெம்குலம் முழுதும்
ஆள வேண்டும்என் றுடுஇனம் சரண்புகல் அனைய. (34)

*(பொழிப்புரை) தன் திருவடியை வழங்கி ஆட்கொள்கின்ற கால காலப்பெம்மான் திருமுன்பில் ஒளிமிக்க தீபங்கள் மிகப் பலவாக எரிந்து கொண்டிருக்கும் காட்சி, ஒன்பான் கிரகங்களுள் ஒன்றாக விளங்குகின்ற எம்முடைய தலைவனாகிய சந்திரனைப் போலவே எங்கள் இனம் முழுவதையும் ஆட்கொள்ள வேண்டும் என வேண்டி நட்சத்திரக் கூட்டங்கள் அடைக்கலம் அடைந்ததைப் போல உள்ளது.*

*சந்திரன் நட்சத்திரங்களுக்குத் தலைவன்; உடுபதி என்றே அவனைக் கூறுவர். சிவபெருமான் சந்திரனின் கயரோகத்தை நீக்கி அவனைத் தன் தலையில் தரித்துள்ளதைப் போல் எங்கள் இனம் முழுவதையும் ஆட்கொள்ள வேண்டும் எனத் தாரகைகள் வேண்டுகின்றன என்பது கற்பனை. விளக்குகள் நட்சத்திரங்களைப் போலச் சுடர் விடுகின்றன என்பது செய்தி.*

88. கால காலவீச் சுரன்தளிச் சிகரிகாப் பமையாத்
தூல லிங்கம்என் றேவெயில் படாதுகாத் தோய்ந்து
மூலம் ஆர்கனிச் சாறலர் மதுமுடிக் காட்டிச்
சால நன்மலர் கொண்டர்ச்சித் தன்பினில் தழைக்கும். (35)

*(பொழிப்புரை) காலகாலேச்சரத்தின் ஒப்பற்ற கோபுரம் கதவுகளால் பூட்டி வைக்கப் பெறாத தூல லிங்கம் ஆகும் என்பதால் கோயில்பாளையத்தின் சோலைகள் அதன்மீது வெய்யில் படாமல் தம் மர நிழல்களைப் பரப்பியும், தலைமையான பழச் சாற்றையும் மலர்த் தேனையும் சிகரத்தில் திருப்புனலாட்டைப் போல் ஊற்றியும், நல்ல பூக்களை ஏராளமாகக் கொண்டு பக்தியோடு அருச்சித்தும் விளங்கும்.*

*மூலம் ஆர் என்பதற்குத் தமக்குச் சொந்தமான எனினும் அமையும். கோபுரம் சோலை நிழலில் கனிச்சாறுகளும் தேனும் மலர்களும் தன் மீது படியுமாறு உள்ளது என்றவாறு.*

89. கிளர்ந்த நெஞ்சினுள் காலகா லேச்சுரன் கிருபை
வளர்ந்தெ ழும்திறம் போல்அமை கௌசையின் மாட்சி
உளர்ந்த நெஞ்சினேன் ஒடுக்கிஆண் டுற்றருள் உற்றுக்
குளிர்ந்து ளோர்நலம் கூறிஎன் பவம்அறக் குமைப்பேன். (36)

*(பொழிப்புரை) மேல் நிலை அடையும் உள்ளத்தில் காலகாலேசருடைய கருணை நாளுக்கு நாள் அதிகமாகப் பதியும் தன்மையைப் போல எப்போதும் வளர்ந்து கொண்டே இருக்கும் கோவில்பாளையத்தின் சிறப்பினை – அலைபாயும் நெஞ்சினை உடையேனாகிய – அடியேன் இத்துடன் நிறுத்திக் கொண்டு, அந்தத் தலத்திற்கு வந்து வரம் பெற்று மகிழ்ந்தவர்களின் சிறப்பினைச் சொல்லி, என்னுடைய பிறவிப் பிணி அழியும்படி செய்துகொள்ளுவேன்.*

*கௌசையம்பதியில் காலகாலப்பெருமானை வழிபட்டுமேலான பேறடைந்தவர்களின் வரலாற்றைக் கூறுவதால் என் பிறவிப்பிணி நீங்கும் எனக் கூறியதால் இதனைப் படிப்பவர்களுக்கும் அத்தகைய பேறுவாய்க்கும் என நூற்பயன் கூறியவாறாயிற்று.*

*நகரப்படலம் முற்றிற்று.*

# 4. இயமதருமன் வழிபடு படலம்

*(அறுசீர் விருத்தம்)*

90. சாமியாம் கால காலே சன்திரு விளையாட் டெல்லாம்
நேமியங் காவோர் சொல்கை நேர்ந்திடு நிறைவெய் தில்லேன்
பூமியில் அறிவ றிந்தோர் புகல்மொழிச் சரதம் கொண்டென்
நாமிளிர் பெரும்பே றெய்த நவிலுவன் சிறிது மாதோ. (1)

*(பொழிப்புரை) தலைவராகிய காலகாலேசப் பெம்மான் இயற்றிய அருளாடல்களை எல்லாம் நைமிச வனத்தில் இருந்த முனிவர்கள் எவ்வாறு கூறினார்கள் என அறிகின்ற முழுமையைப் பெற்றேன் இல்லை. இந்த உலகத்தவர் தமக்குத் தெரிந்த அளவு சொல்லுகின்ற செவிமொழிச் செய்திகளை உண்மையாக ஏற்று, அடியேனுடைய நாக்கு நன்மை பெறுமாறு, கொஞ்சம் கூறத் தொடங்குகிறேன்.*

*நேமி அம் காவோர் – நைமிச வனத்து முனிவோர். ஒரு முறை முனிவர்கள் தாம் தவம் செய்ய, தக்க இடத்தைக் கூறுமாறு பிரமனைக் கேட்டனர். அவர் ஒரு தருப்பைப் புல்லை எடுத்துச் சக்கரம் போல (நேமி) உருவாக்கி, உருட்டி விட்டார். முனிவர்களிடம் அந்தச் சக்கரத்தின் பின்னால் சென்று அது நிற்குமிடத்தில் தங்கித் தவம் புரிக என்று கூறினார். நேமி நின்ற காடு நைமிச வனம் எனப் பெயர் பெற்றது. பெரும்பாலான புராணங்கள் நைமிசவனத்தில் முனிவர்கள் கேட்கச் சூதர் கூறியனவாகவே உள்ளன.*

*கௌசைப் புராணத்திற்கு மூலநூல் எனத்தக்க வடமொழிப் புராணம் எதையும் தான் பார்க்கவில்லை என்றும், பொதுமக்களால் செவிவழிச் செய்திகளாக வழங்கும் செய்திகளை ஆதாரமாகக் கொண்டு இந்த நூலை இயற்றுகின்றேன் எனவும் கூறுகிறார். இதனால் இந்த நூலின் ஆதாரம் செவிவிழிச் செய்திகளே; வேறு ஒரு முதல் நூல் அன்று என்று தெரிவித்தவாறு.*

*(எழுசீர் விருத்தம்)*

91. வளம்பொலி சோழ நாட்டில்நான் மறையின்
வரம்புகண்ட வற்றுட்சொற் கொண்டே
விளம்பொலி முடியின் வீற்றிருந் தருளும்
விமலமெய்ப் பரம்பொருள் ஆவோன்
களம்பொலி நஞ்சம் அமைத்தவன் எனஉள்(க்)
கருதிஅன் னவன்திருத் தாளே
உளம்பொலி தரக்கொண் டவன்கட வூர்வாழ்வு
உற்றவன் மிருகண்டே யனனே. (2)

*(பொழிப்புரை) சோழ நாட்டின் திருக்கடவூரில் வாழ்ந்து வந்தவர் மிருகண்டேயன் என்னும் அந்தணர். இவர் நான்கு வேதங்களையும் ஓதி உணர்ந்து, அவற்றின் மெய்ப்பொருளாவது நாததத்துவத்தின் உச்சியில் விளங்கும் நீலகண்டப் பெருமானே என மதித்து, அவர் திருவடிகளையே தியானித்து வந்தார்.*

92. அருந்ததிக் கற்பார் மனைமருத் துதியோடு
அமைமனை அறங்கள்பற் பலவும்
திருந்திடப் புரிந்து பற்பல்நாள் முயன்றும்
சீர்த்திஆர் சேய்இலா மையினால்
வருந்திமெய்க் கடவூர் அமுதக டேசர்
மலர்ப்பதத் துணைமனத் திருத்திப்
பெருந்தவம் இயற்றிச் சிவபிரான் அணையப்
பெற்றடி தொழுதுவந் தெழுந்தான். (3)

*(பொழிப்புரை) அருந்ததியைப் போன்ற கற்புடைய மனைவி ஆகிய மருத்துத்வதி என்பவளோடு இல்லறத்தை நல்லறமாக இயற்றி வந்தார். நீண்ட நாள் ஆகியும் மிருகண்டு முனிவருக்குப் புகழ் அளிக்கும் பிள்ளைப்பேறு வாய்க்காமையால் கவலைப்பட்டுத் திருக்கடவூர் அமுதகடேசரின் திருவடிக் கமலங்களையே தியானித்தவராகத் தவம் புரிந்தார். தவத்தின் முடிவில் இறைவன் காட்சியளிக்க முனிவர் எழுந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பெருமகிழ்வெய்தினார்.*

*இத் தம்பதியினர் பெயர்கள் வடமொழியில் மிருகண்டு, மருத்துவதி என வழங்கும். மேலும் அவர் தவம் புரிந்தது காசியில் எனவும் வடமொழிப் புராணங்கள் கூறுகின்றன.*

93. விழியில்நீர் பெருக, மெய்புள கரும்பி
விதிர்விதிர்த் திடப்பல்கால் வணங்கி,
மொழிகுழ, றினன், "என் குலம்விளக் கிடுகான்-
முளைஎனக் கருள்"என இரப்பப்
"பழிபெறும் சேய்நூ றாண்டுறக் கொளவோ?
பத்திமெய்ஞ் ஞானம்ஆ தியகொள்
செழியஓர் மகவீர் எண்வய தமையச்
சேரவோ? விருப்புரை" என்றான். (4)

*(பொழிப்புரை) கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழிய, மயிர்க் கூச்செறிய, நடு நடுங்கி, பல முறை வணங்கி வார்த்தைகள் தடுமாற, "அடியேனின் மரபு தழைவதற்கான மகனை வழங்கி அருள்பாலிக்க வேண்டும்" என வேண்ட, இறைவன், "பாவம் புரிகின்ற மகனாக நூறாண்டு வாழ்பவன் வேண்டுமா? இறையன்பு, நல்லறிவு முதலிய நற்பண்புகளைக் கொண்டு*

*பதினாறுஆண்டு ஆயுள் மட்டும் உடையவன் வேண்டுமா? உன் விழைவைச் சொல்லுக" என்றான். மொழி குழறினன் – முற்றெச்சம்.*

94. "பின்உரை மகவே வேண்டும்" என் றிடலும்
பிரான்வரம் ஈந்தனன் மறைந்தான்.
கொன்உறும் மிருகண் டேயன்அவ் வாறோர்
குறைவிலாத் திருவருள் வடிவா
மன்னுசற் புதல்வற் பெற்றவற் குவப்பால்
மார்க்கண்டன் எனப்பெயர் சாற்றி,
முன்உறு பிறைபோல் வளர்திரு மகவின்
முதிர்சிறப் பறிந்தறிந் துவந்தான். (5)

*(பொழிப்புரை) "தேவரீர் பின்னால் கூறிய நல்ல மகனே வேண்டும்" என்று முனிவர் இறைஞ்சச் சிவபெருமான் வரந் தந்து மறைந்தார். பெருமை மிக்க மிருகண்டேய முனிவர் அவ்வரத்திற்கேற்ப ஒரு தாழ்வும் இல்லாத – இறையருளின் உருவமாகவே விளங்கும் – மைந்தனைப் பெற்று, மகிழ்ச்சியோடு அவனுக்கு மார்க்கண்டேயர் எனப் பெயரிட்டார். மகன் வளர்பிறைச் சந்திரனைப் போல வளர்ந்து வரும் பெருமையைப் பார்த்து முனிவர் மகிழ்ச்சியடைந்தார்.*

*மார்க்கண்டேயன் என்பது மிருகண்டுவின் மகன் எனப் பொருள்படும் தத்திதாந்த நாமம்; இது அம் முனிகுமாரனின் இயற்பெயர் அன்று. இயற்பெயர் வழக்கொழிந்தது.*

95. ஐந்தமை பருவம் எய்தும்முன் அங்கம்
அரும்மறை உபநிடப் பயிற்சி
மைந்தன்உற் றமைகண் டுவகையின் மூழ்கும்
மருத்துதி மனைவியும் தானும்
இந்தணி சடையான் அருள்வரம் உள்ளத்து
எண்ணிஉள் ஒளிமுகத் தொழிந்து
நொந்தழி திறம்கண் டுடன்வின வினன். உள்
நுழைந்தவா றவர்இவற் கிசைத்தார். (6)

*(பொழிப்புரை) ஐந்து வயது நிறையும் முன்பே தம் மைந்தன் மறைகளின் ஆறு அங்கங்கள், நான்கு வேதங்கள், உபநிடதம் ஆகியவற்றை நன்கு கற்றுத் தேர்ந்தமை கண்டு மிக்க உவகை அடைந்த மருத்துவதியும் முனிவனும் (மைந்தனின் ஆயுள் பதினாறு ஆண்டுகளே என்னும்) சிவபெருமான் வரத்தை நினைந்து முகம் ஒளி இழக்க வருந்தினர். மார்க்கண்டேயன் தன் பெற்றோரின் துயரத்திற்குக் காரணத்தைக் கேட்டான். அவர்கள் நிகழ்ந்த வரலாற்றை எல்லாம் கூறினார்.*

96. வினவுசேய் களிப்புற்று "அருந்தவத் தால்என்
விதிஒழிப் பேன்"என விளம்பித்
தனதுதாய் தந்தை விடைகொடு, கடவூர்த்
தாணுவை இடையறா தேத்தி,
அனகநல் தவம்ஈர் எண்வய தளவும்
ஆற்றி,ஆண் டமையும்நாள் இயமன்
முனம்இசைந் துற்ற சித்திர குத்தன்
முடிவின்று மார்க்கண்டற் கென்றான். (7)

*(பொழிப்புரை) கேட்ட மகன் மகிழ்ச்சி அடைந்து, "செயற்கரிய தவம் செய்து (பதினாறில் சாவு என்னும்) என் ஊழை ஒழிப்பேன்" என்று சொல்லிப் பெற்றோர்களிடம் விடைபெற்று, திருக்கடவூர்ச் சிவபெருமானைச் சற்றும் இடையீடு இல்லாமல் போற்றி, குற்றமற்ற நல்ல தவத்தைத் தன் பதினாறாம் வயதுவரை செய்து வந்தான். உரிய நாளில் இயமதருமனின் கணக்கனாகிய சித்திர குப்தன் "இன்றோடு மார்க்கண்டேயனின் ஆயுள் முடிவடைகிறது" என்று கூறினான்.*

97. இயமன்அவ் வுரைகேட் டெதிர்கொள்தூ தர்களை
ஏவ,அன் னவர்கள்மார்க் கண்டன்
நியமம்ஆர் தவஅக் கினிதகித் திடலின்
நெஞ்சயர்ந் திறைமுனம் புகல்கால்,
செயம்மலி தருமன் சென்றவன் அஞ்சாத்
திறல்கொள்வா திடுதலில் சினந்து,
பயமுடன் இலிங்கத் தினைப்பற்றப் பாசம்
பாசம்இல் லான்கணும் எறிந்தான். (8)

*(பொழிப்புரை) சித்திரகுப்தனின் சொற்களைக் கேட்டு இயமன் தன் தூதுவர்களை மார்க்கண்டேயனின் உயிரைக் கவர்ந்து வர அனுப்பினான். வந்த அவர்கள் முனிகுமாரனின் தவக்கனலைத் தாங்கமாட்டாமல் திரும்பிச் சென்று தம்தலைவனிடம் செய்தியைக் கூறினார்கள். இதனைக் கேட்ட தருமன் தானே சென்றான். சற்றும் பயமில்லாமல் மார்க்கண்டேயன் வாதிடுவதைக் கண்டு கோபங் கொண்ட இயமன் தன் பாசத்தை வீசலுற, அஞ்சிய மைந்தன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, இயமனுடைய கயிறு இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவராகிய சிவபெருமானின் லிங்கத் திருமேனிமீதும் பட்டது.*

98. சிவபிரான் உடன்உக் கிரத்துடன் தோன்றித்
திருந்திடத் தாளினால் தாக்க
அவம்உறும் இயமன் மடிந்துதே வர்கள்ஆண்டு
ஆயிரம் ஒழிந்திறப் பிலராய்ப்
புவனிமாந் தர்உறும் பெருஞ்சுமை ஆற்றாள்
பூமினாள் அமரர்கள் வேண்ட
நவம்உறும் இயமன் உயிர்பெற அருளி
நக்கன்அங் கவற்கிது நவில்வான். (9)

*(பொழிப்புரை) உடனே சிவபெருமான் சினத்துடன் வெளிப்பட்டு, செப்பமான இடது திருவடியால் உதைக்க, அபாயத்தைப் பெற்ற தருமன் இறந்தான். ஆயிரம் தேவ வருஷங்கள் கழிந்தன. உலகில் பிறந்தவர்கள் யாருமே இறக்காததால் நிலத்தில் பூபாரம் அதிகமாகிப் பூமிதேவியும் தேவர்களும் இறைஞ்ச, சிவபெருமான் இயமனுக்குப் புத்துயிர் அளித்துக் கீழ்க்கண்டவாறு கூறலுற்றார்.*

99. "தேவர்வேண் டிடநின் றனைஎழுப் பினன்; நீ
செய்அதி பாதக சேடப்
பாவம்நீங் கிடக்கொங் கணைந்துநம் பேரூர்
பயில்வட குணதிசை அடைந்தென்
மேவருள்(த்) துணைகொண் டியல்சிவ லிங்க
வியன்உரு ஒன்றுதா பித்துள்
ஆவலில் தீர்த்தம் அகழ்ந்துபூ சனைமிக்கு
ஆற்றிமா தவம்முயல்" என்றான். (10)

*(பொழிப்புரை) "தேவர்களின் வேண்டுகோட்காக உன்னை உயிர்ப்பித்தோம். நீ செய்த பெரிய பாவத்தில் கழிந்தது போக எஞ்சியுள்ள தீவினை அகலக் கொங்கு நாட்டிற்குச் சென்று, பேரூருக்கு வடகிழக்கில் எம்முடைய அருளின் வலிமையைக் கொண்டு, சிவலிங்கம் ஒன்றினை நிலை நிறுத்தி, பக்தியுடன் ஒரு நீர் நிலையையும் உண்டாக்கி வழிபட்டு, தவம் புரிவாயாக" என்று சிவபெருமான் கூறினார்.*

100. சிவபிரான் அருளும் குருமொழி தன்னைச்
செவிகொடு சிரமிசை அமைத்திட்டு
உவகையின் வணங்கித் துதித்தணிப் பேரூர்
உற்றிறை வனைஅர்ச்சித் தேத்தி,
தவமலி கௌசி கப்பதி யாம்இத்
தனிவனத் தமைந்துளந் தன்னில்
உவமைதீர் தவம்செய் கால்இறை அருளால்
உரைத்ததாங் கோர்அச ரீரி. (11)

*(பொழிப்புரை) சிவபெருமானின் உபதேசத்தைச் செவியேற்று, அதனைத் தலைமீது தாங்கி, மகிழ்ச்சியோடு வணங்கி, போற்றி, திருப்பேரூர் வந்து, பட்டீசரை அருச்சித்துத் துதித்து, புனிதமான கௌசிகபுரியாகிய கோயில்பாளையம் என்னும் இந்தத் தனிமையான காட்டில் மனம் பொருந்தி இணையற்ற தவம் செய்து கொண்டிருந்தபோது கடவுளின் கருணையால் அவ்விடத்தில் ஆகாயவாணி ஒன்று எழுந்தது.*

101. "இவ்விடை உனது தண்டினால் ஊன்றில்
எற்றிடும் தீர்த்தம்ஒன் றதன்மேல்
செவ்விதின் எழுந்த நுரையைஎன் அருளால்
சிவக்குறி யாம்எனத் திரட்டி,
அவ்வியம் அகலப் பூசைஆற்று" என்ன,
அவ்வகை யாகவே புரிந்து,
திவ்விய மனத்தன் அர்ச்சனை பூசை
தினம்புரிந் தரும்தவம் முயன்றான். (12)

*(பொழிப்புரை) "இந்த இடத்தில் உன்னுடைய கதாயுதத்தை அழுத்தினால் நீர் எதிர்த்து வந்து ஒரு நீர்நிலை உண்டாகும்; அதில் மிதக்கும் நுரையைச் சேர்த்து, ஒரு லிங்க வடிவம் ஆக்கி, மனக்கவலை தீரும்படி வழிபடுக" என்று ஆகாயவாணி இயம்ப, இயமன் அப்படியே செய்து நல்ல எண்ணங்களை உடையவனாக நாள்தோறும் அருச்சித்து வழிபடுதலாகிய தவத்தைச் செய்து வந்தான்.*

*எற்றுதல் – தண்ணீர் எதிர்த்து வருதல், பீச்சி வருதல்.*

102. பற்பல காலம் அங்ஙனம் புரிந்து
பரவசம் மிக்கமைந் தவனாய்
"சிற்பர! தேவ தேவ! மெய் உணர்வில்
சிறியனேன் இயற்றுவெம் பாவம்
துற்பயன் அளியா தாண்டுநின் பணிசெய்
தொண்டன்ஆக் கியநின்பேர் அருட்கிங்கு
அற்பனேன் புரிகை மாறுமற் றறியேன்
அடிப்பணி இயற்றிடல் அலதே" (13)

*(பொழிப்புரை) நீண்ட நாட்கள் அவ்வாறு வழிபட்டு மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தவனாகி, "பசு ஞான பாச ஞானங்களுக்கு அப்பாற்பட்டவரே! தேவர்களுக்கு எல்லாம் தேவனாகிய மகாதேவரே! மெய் அறிவு இல்லாதவனாகிய சிறியேன் புரிந்த கொடிய பாவத்திற்குத் தீய தண்டனை அளிக்காமல் ஆட்கொண்டு, தேவரீருக்குப் பணிவிடை புரியும் அடியவனாகச் செய்த பெருங்கருணைக்குப் புல்லிய நான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்? திருவடிகளுக்குத் தொண்டு செய்வதாகிய ஒன்று மட்டுமே அறிவேன்" (குளகமாகத் தொடரும்)*

103. எனப்பல வாறு துதித்தனன் மெழுகொத்து
இதயம்நெக் குருகிடச் செயல்போய்
மனப்பர வசம்உற் றிருவிழி களில்நீர்
மலையில்வீழ் அருவியில் வழிய,
கனப்படு தவம்செய் தியலும்நாள் கருணா-
கரக்கொடி படர்ந்தசெம் பவள
வனப்பவிர் மேனி துலங்கிடத் தரும
வடிவுறும் இடபமேற் கொண்டே (14)

*(பொழிப்புரை) என்று பலவாகத் தோத்திரம் புரிந்து, இதயம் மெழுகைப் போல அன்பினால் கரைந்துருக, உடலின் செய்கைகள் யாவும் கழன்றுவிட, பேரானந்தம் அடைந்து, கண்களில் மலையின் அருவியைப் போல நீர் வழிய, பெருமை மிக்க தவமியற்றிக்கொண்டு இயமன் இருந்த காலத்தில் ஒருநாள் காலகாலேசப்பெம்மான், கருணாகரவல்லி ஆகிய பூங்கொடி படர்ந்த செம்பவளம் போன்ற திருமேனி கொண்டு அறமாகிய விடையூர்தியில் இருப்பவராக (குளகமாகத் தொடரும்).*

104. வரம்மலி திருமால் வேதன்இந்த் ராதி
வானவர் சூழ்ந்துதோத் தரிக்க,
பிரமத கணங்கள் சயசய என்ன,
பேர்ஒலி எடுத்தியம் இயம்ப,
கரம்அவிர் மழுமான் அசைந்திட, நீல
கண்டம்ஆ தியஎழில் கவின,
புரம்அழ லாக்கும் நகைத்திரு மலர்வாய்
புன்முறு வற்றிறம் பொலிய (15)

*(பொழிப்புரை) மேன்மை மிக்க திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோரும் கூடித் துதிக்கவும், கயிலாயத்தில் உள்ள சிவகணங்கள் வெற்றி கூற, பல்வேறு இசைக்கருவிகள் பெரு முழக்கம் செய்ய, திருக்கைகளில் உள்ள மழுப்படையும், மானும் அசைய, கழுத்தின் நீலநிறம் முதலிய அழகுகள் பொலிய, முப்புரங்களை நீறாக்கவல்ல புன்னகையையுடைய மலர் போன்ற வாயில் புன்முறுவல் அரும்ப, (குளகமாகத் தொடரும்)*

105. மதனனை எரித்த விழிமலர் தருமன்
வண்பவக் கடல்அறப் பருக,
இதம்உறும் அபய வரதகைத் தலங்கள்
இசைதரும் அச்சம்முற் றொழிப்ப,
மதம்அற ஒழித்த பதமலர் இரண்டும்
மாண்விழி விருந்தென உற,அற்
புதஅருள் இருகண் கொட்ட,நேர் நின்ற
பூரணன் தனைஅறன் கண்டான். (16)

*(பொழிப்புரை) மன்மதனை நீறாக்கிய நெற்றிக்கண் இயமனின் கொடிய பிறவியாகிய சமுத்திரம் வற்றும்படியாகக் குடிக்க, நன்மையைப் புரிகின்ற அஞ்சேல் என்னும் அபய முத்திரையும், எது வேண்டுமானாலும் கொடுக்கிறேன் என்னும் வரத முத்திரையும், அவன்பாற் பொருந்தியிருந்த எல்லாப் பயங்களையும் முழுவதுமாக நீக்க, நான் என்னும் இறுமாப்பை முற்றிலுமாக நீக்கிய திருவடிகள் இரண்டும் கண்களுக்குச் சிறந்த பேரெழிற் காட்சியாக அமைய, இரு திருவிழிகளும் அரிய திருவருளைப் பொழிய தன் எதிரில் நின்ற பரம்பொருளை இயமன் தரிசித்தான்.*

*நெற்றிக்கண் ஆகிய தீ வடவையாகப் பிறவிக்கடலைப் பருகியது என்க. இயமனை உதைத்ததால் அவன் அகந்தையைத் திருவடிகள் போக்கின. விழிமாண் விருந்து என மாறுக.*

106. கையிணை உச்சி மிசைகுவித் திருகண்
கரைஇல்ஆ னந்தநீர் பொழிய,
“பொய்யிழி வாழ்வை மெய்யெனக் கொண்டு,
புன்புல போகமா மாயைத்
தொய்யிலூ டழுந்திச் செய்வகை அறியாத்
துட்டனேன் மீதருள் சுரந்து,
கையில்ஆ மலகம் போன்றருட் காட்சி
கடைக்கணித் தாய்க்கென்கை மாறே?” (17)

*(பொழிப்புரை) கரங்களைத் தலைக்குமேல் குவித்துக் கொண்டு, இரு கண்களும் எல்லையின்றி இன்பக் கண்ணீர் உருக்க, “நிலை இல்லாததாகிய கீழான உலகியல் வாழ்க்கையின் நலங்களை நிலையானவையாகக் கருதி, ஐம்புலன்களால் நுகரப்படும் புல்லிய இன்பங்களாகிய பெரிய மாயை என்னும் சேற்று நிலத்தில் அழுந்தி, செய்யத்தக்க நற்செயல்கள் எவை என்பதை அறியாத தீயவனான அடியேனின்மீது கருணை காட்டி, உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தரிசனம் தந்தருளிய தேவரீரின் திருவருளுக்கு எளியேன் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்?” (குளகமாகத் தொடரும்)*

107. இனையபல் வாறு புகன்று,தன் வசமற்று,
இணையடி களில்அடி அற்ற
பனைஎன விழுந்து கிடந்தெழாத் தருமன்
பத்திகண் டரன்உவப் படைந்து,
“தனைநிகர் தான்ஆம் தன்னிய! நீஅஞ்
சலை”என ஆசிகள் சாற்ற
நினைவுபெற் றெழுந்த பின்னர்இவ் வகையால்
நிமலனைத் துதித்திடு கின்றான். (18)

*(பொழிப்புரை) இவ்வாறு பலவிதமாகக் கூறி, தன் சுய உணர்வை இழந்து, இறைவனின் திருவடிகளில் அடிப்பாகம் வெட்டுண்ட பனைமரம் போல விழுந்து, அந்நிலையிலிருந்து எழுந்திருக்காத இயமனுடைய பக்தியைப் பார்த்த சிவபெருமான் மனமகிழ்ந்து, "இணையற்ற நற்பேறுடையவனே! நீ பயப்படவேண்டாம்" என வாழ்த்தினார். நினைவு பெற்று எழுந்த காலன் பின்வருமாறு காலகாலேசப் பெம்மானைத் துதிக்கத் தொடங்கினான்.*

(கலித்துறை)

108. விரிந்த வல்வினைத் தொடர்பினால் திரண்பொய் மெய்யைப்
பரிந்து நான்எனக் கொண்டகங் கரக்கடல் படிந்து
திரிந்த மாயையாய் மயங்கிய புன்மைசால் சிறியேன்
புரிந்த தீமைதீர் காலகா லேச்சுர! போற்றி (19)

*(பொழிப்புரை) எண்ணிக்கையால் விரிந்ததும் வலிமை மிக்கதுமான இருவினைகளின் கூட்டுறவால் விளைந்ததும், நிலைஅற்றதுமான உடலின்மீது அபிமானம் கொண்டு, அதையே ஆன்மா என மயங்கி அகந்தையாகிய கடலில் மூழ்கி, அறிவை மாறாட்டம் செய்கின்ற மாயையால் அறிவழிந்துள்ள புல்லிய எளியேன் செய்த பாவத்தை நீக்கியருளிய காலகாலப் பெருமானே! தோத்திரம்.*

109. "கூற்றன் யான்உல குற்றிடும் ஆவியின் குலங்கள்
மாற்ற வல்லவன் எனக்குமேம் பாடுற மதிக்கும்
ஆற்றல் சான்றவர் யார்"என்ஆ ணவம்அழித் தன்பால்
போற்ற முன்வரும் காலகா லேச்சுர! போற்றி! (20)

*(பொழிப்புரை) "கூற்றுவனாகிய யான் உலகில் உள்ள எல்லா உயிர்களையும் உடலிலிருந்து பிரிக்கவல்லவன்; என்னைவிட மேலாகக் கருதத்தக்க ஆற்றல் உள்ளவர் யார் இருக்கிறார்கள்? என்னும் அடியேனுடைய ஆணவத்தைப் போக்கிக் கருணையால் ஆதரிக்கக் காட்சியருளும் காலகாலனே! தோத்திரம்.*

110. இனிய நின்அருட் பெருமையை இதயமீ தெண்ணேன்
முனிவு நல்கும்அஞ் ஞானத்துள் மூழ்கிய மூர்க்கன்(க்)
கனிவி னால்திரு வடிஅரு ளான்மிசை கலத்திப்
புனிதன் ஆக்கிய காலகா லேச்சுர! போற்றி! (21)

*(பொழிப்புரை) தேவரீரின் இனிமைமிக்க திருவருட் சிறப்பை உள்ளத்தில் எண்ணாதவனாகி, சினத்தை உண்டாக்கும் அறியாமை என்னும் இருளில் மூழ்கியுள்ள மூடனாகிய என்மீது கருணைகொண்டு அருள்மயமாகிய புனிதப்பாதங்களை என் உடல்மீது சேரச்செய்து (உதைத்து), என்னைத் தூயவனாக்கிய காலகாலேச்சுர! தோத்திரம்.*

*திருவடி அருளால் என்பதை அருள்திருவடி எனமாறுக. ஆல் அசை கலத்தி – கலக்கச் செய்து என்னும் பொருளில் அரிய ஆட்சி, வருத்தல் வருத்தி என்பது போல.*

*(அறுசீர் விருத்தம்)*

111. என்றுபல படத்துதித்த தருமன்மிசை
உள்ளம்மகிழ்ந் திறைவன் இன்பாய்,
"நன்றுநன்றுன் தொண்டினுக்குள் உவப்படைந்தேன்;
நீஉளத்தில் நசைத்த யாவும்
இன்றுவழங் கிடக்கேட்டி" என்றருள,
உவகைபொலிந் திருதாள் போற்றி,
"ஒன்றும்அறி யாச்சிறியேற் கருட்காட்சி
நல்கினை;ஒன் றிதன்மேல் உண்டோ? (22)

*(பொழிப்புரை) எனப் பலவாறு தோத்திரித்த இயமன்பால் மனம் உவந்து இனிய சொற்களாகச் சிவபெருமான், "நல்லது; உன் பணியால் மகிழ்ந்தோம். நீ விரும்பியவற்றை எல்லாம் இந்நாள் தருகின்றோம்; கேட்பாயாக" எனச் சொல்ல, காலன் சந்தோஷம் மிகுந்து இறைவனின் இரு திருவடிகளையும் வணங்கி, "நன்னெறி ஒரு சிறிதும் அறியாத எளியேனுக்கும் தேவரீர் உம் கருணையால் காட்சி வழங்கினீரே! இதற்கு மேற்பட்ட நற்பேறு வேறு ஏதேனும் உண்டோ" (குளகமாகத் தொடரும்.)*

112 "வன்புருவாம் கொடுமனத்தே னுட்பொருந்தும்
தீமைஎல்லாம் மாற்றி மெய்ப்பேர்
அன்புருவாக் கிடல்வேண்டும்; உமைமறவா
வரம்எனக்குஈண்டு அருளல் வேண்டும்;
துன்புருவாம் மலம்மாயை கன்மம்ஒன்றும்
எனைஎன்றும் தொடாமை வேண்டும்;
இன்புருவாம் நின்னடியார் இனத்தொருவன்
ஆகஎனை ஏற்றல் வேண்டும். (23)

*(பொழிப்புரை) மறமே வடிவான கொடிய உள்ளத்தவன் ஆகிய அடியேனின் அகத்தில் இருக்கும் குற்றங்கள் அனைத்தையும் ஒழித்து உண்மையான அன்பு மயமாகச் செய்தருள வேண்டும். தேவரீரை எப்போதும் மறவாத தன்மையை வரமாக அருளவேண்டும். எல்லாத் துன்பங்களுக்கும் முதற் காரணமாகிய மூலமலம் ஆம் ஆணவமும், மற்ற கன்மம் மாயை ஆகிய சம்பந்த அநுபந்த மலங்களும் எளியேனை எப்போதும் பற்றாமல் இருக்கவேண்டும். இன்பமயமான தேவரீரின் தொண்டர் திருக் கூட்டத்தில் ஒருவனாக அடியேனையும் ஏற்றருள வேண்டும்.*

113.“திருக்கடவூர் தனில்அடியேன் றன்னைமறக்
கருணையினால் திருத்தி ஆள
முருக்குதலால் காலகா லப்பெயர்கொண்டு
உற்றஅருள் முறைமை போல,
இருக்கறியாப் பெரும்சேவை இத்தலத்தில்
அநுக்கிரகத் திடும்ஓர் பண்பால்
பெருக்கஅருள்(க்) காலகா லேச்சுரன் ஆம்
திருநாமம் பெறுதல் வேண்டும். (24)

*(பொழிப்புரை) திருக்கடவூரில் அடியேனை மறக்கருணை காட்டித் தவற்றினை நீக்கி ஆட்கொள்ளவேண்டிக் கொன்ற காரணத்தால் காலகாலப்பெருமான் எனப் பெயர் தாங்கி விளங்குவதைப் போன்று, வேதங்களுக்கும் எட்டாத தங்களுடைய தரிசனத்தைக் கௌசிகபுரி ஆகிய இந்தத் தலத்தில் கொடுத்தருளிய தன்மையால் இங்கும் தேவரீரின் திருநாமம் அருள்மிகு காலகாலேச்சுரன் என்று சிறப்பாக வழங்கப்பெற வேண்டும்.*

*இருக்கு மற்ற வேதங்களுக்கும் உபலட்சணம்.*

114.“பெரும்பாவம் புரிந்தஎனக் கித்தலத்தில்
அருள்புரிந்த பெற்றி போல்உன்
அரும்பாத மலர்பணிந்து பூசைஅன்பில்
புரிந்திடும்மெய் அன்பர்க் கெல்லாம்
திரும்பாத வீடமையத் தரல்வேண்டும்;
உன்அருளின் சிறப்பாய் வாமம்
வரும்பாவை அணிக்கருணா கரவல்லிப்
பெயரொடிவண் வதிதல் வேண்டும். (25)

*(பொழிப்புரை) கொடிய தீச்செயல் புரிந்த அடியேனுக்கும் இந்தத் திருத்தலத்தில் அருளியதைப் போன்றே தேவரீரின் பெறுதற்கரிய திருவடித் தாமரைகளை வணங்கிப் பக்தியுடன் வழிபடுகின்ற அடியார்கள் எல்லோருக்கும் மறு பிறவி அற்ற முத்திநிலையை அளிக்கவேண்டும். தேவரீரின் திருவருளின்*

*வடிவமாகத் திருமேனியின் இடப்பாகத்தில் அமைந்த அம்மை இங்கு கருணாகரவல்லி என்னும் திருப்பெயருடன் திருக்கோயில் கொள்ள வேண்டும்.*

*எனக்கு என்பூழி இழிவு சிறப்புமை தொக்கது.*

115.“உன்அருளால் எனதுதண்டம் ஊன்றவரும்
தீர்த்தம்இதை உலகோர் எல்லாம்
என்னதுபேர் அமைகாலப் பொய்கை,தண்ட
தீர்த்தம்என இசைத்துப் போற்றி,
நன்னலம்ஆர் நின்மேனிக் கபிடேகம்
செயல்வேண்டும்; நானம் ஆற்றில்
இன்னல்உறும் பிணிமுதலாம் இடர்கள்அகன்று
இட்டசித்தி எய்தல் வேண்டும். (26)

*(பொழிப்புரை) தேவரீரின் திருவருளால் என் கதாயுதத்தை ஊன்றியதால் உண்டான திருக்குளத்தை மக்கள் என் பெயரால் காலப் பொய்கை எனவும், தண்ட தீர்த்தம் எனவும் வழங்கி, இதன் நீரை உம் சிவலிங்கத் திருமேனியின் மங்கலத் திருமுழுக்காட்டிற்குப் பயன்படுத்தவேண்டும். இதில் குளிப்பவர்கள் தம் பிணிகள் முதலிய துன்பங்கள் யாவும் நீங்கி, விரும்பிய பயனைப் பெறவேண்டும்.*

116 “திருவிழா நித்தியம்ஆ தியபூசை
பெற்றிவண்நீ சிறத்தல் வேண்டும்;
பெருவிழா உனக்காற்றும் ஆர்வம்மிகும்
பக்தர்எலாம் பிறப்பென் மாயைக்
கருவிழா தென்பாசத் துருவிழாது
ஆனந்தக் கடல்ஆம் உன்பொன்
மருவிழாப் பதம்புகுதச் செயல்வேண்டும்;
நன்மைமுற்றும் வழங்க வேண்டும். (27)

*(பொழிப்புரை) சிறப்பு வழிபாடுகள், நாள் வழிபாடுகள் ஆகியவற்றைப் பெற்றுத் தேவரீர் இங்கே மாட்சிமை பெற்று விளங்க வேண்டும். உம் திருவிழாக்களைச் சிறப்பாகச் செய்யும் ஆவல் நிறைந்த அடியார் கூட்டங்கள் யாவும் மாயையின் காரணமாக உண்டாகின்ற பிறவியிலும், என் பாசக் கயிற்றால் நேருகின்ற இறப்பிலும் சிக்காமல் பேரின்பமயமான தேவரீரின் கழல்வீடு அடையுமாறு அருள்புரிய வேண்டும். அத்துடன் இம்மை வாழ்விலும் எல்லா நலங்களையும் அளித்தருள வேண்டும்.*

117. பிரியமனம் பிரியம்உறா திப்பதியை
அடியேற்கு; பிஞ்ஞு கப்பேர்ப்
பெரியபொரு ளே!எனக்கீண் டியற்கைஇன்பம்
ஆன அருட் பெருவாழ் வீந்தென்
கரியமல இருள்ஒழித்த காலகா-
லேச!நிறை கருணைக் குன்றே!
துரியநிலை மேல்அமைந்த சுகப்பெருக்கே!
என்உயிர்க்குத் துணைஆம் தேவே! (28)

*(பொழிப்புரை) விசித்திரமான தலைக்கோலம் உள்ளவர் எனப் பொருள் தரும் பிஞ்ஞுகப் பெயர் உடைய பரம்பொருளே! அடியேனுக்கு இத்தலத்தில் பேரின்பம் வழங்கி என் ஆணவத்தை நீக்கிய காலகாலப் பெம்மானே! நிறைந்த தயையாகிய மலையே! தியானத்தில் உயிர்களின் துரியாதீத நிலையின் இன்ப நிறைவே! என் ஆன்மநாயகனாகிய கடவுளே: எளியேனுக்கு இந்தத் திருத்தலத்தை விட்டுப் பிரிவதற்கே மனம் வருவதில்லை.*

118. மாறாதுள் இன்பமைத்தள் ளூறிடச்செய்
உனதின்ப வடிவென் கண்கொள்
பேறாகக் கொண்டசுகப் பிரிவைநினை-
தொறும்அடியேன் பேதுற் றெய்த்தேன்;
ஆறாடும் சடைமுடியாய்! நீறாடும்
திருவுருவாய்! அம்மை ஆகக்
கூறாகும் திருக்கருணா கரவல்லிக்
கொடிஆரும் குழக னேயோ? (29)

*(பொழிப்புரை) கங்கையாறு பொருந்திய சடிலத்தரே! திருநீறு சண்ணித்த மேனியரே! உமாதேவி உடலின் ஒரு பாதியாக ஆகும் காரணத்தால் திருக் கருணாகர வல்லி ஆகிய கொடியால் தழுவப் பெற்ற அழகர் ஆனீரோ? சற்றும் நீங்காமல் என் மனத்தில் பொருந்தி இன்பமூட்டும் தேவரீரின் ஆனந்த மயமான திருவடிவத்தை என் கண்கள் பெற்ற பயனாகத் தரிசித்து அடைந்த மகிழ்ச்சியின் வகையை நினைக்குந்தோறும் அடியேன் அறிவு கலங்கி மயங்குகின்றேன். (பேருவகையால் செய்வதறியாது திகைக்கின்றேன் என்றபடி.)*

119. இன்னபல பலவரங்கள் இரந்துபிரிந்
திடற்கமையா திரங்கு வானை,
பன்னகப்பூண் அணிமார்பர் காலகா-
லேசர்அருள்(ப்) பரிவால் நோக்கி,
“உன்னகம்நாம் பிரியாமல் அமைந்ததிறம்
நீமறவா துளத்தில் கண்டுன்
கொன்னகரத் தரசாட்சி இயற்றென” ஓ-
தலும்,இருகை குவித்துத் தாழ்ந்தான். (30)

*(பொழிப்புரை) இவ்வாறு பல வரங்களை வேண்டியும் பிரிவதற்கு மனமில்லாமலும் வருந்துபவனாகிய இயமதருமனைக் கனிவோடு பார்த்து, அரவாபரணர் ஆகிய காலகாலேசுவரர், "உன் உள்ளத்தில் அகலாமல் நாம் வீற்றிருக்கும் தன்மையை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொண்டே உன் தலைநகரத்திற்குச் சென்று ஆட்சி புரிக" என்று சொல்லிய உடனே, இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு விழுந்து வணங்கினான்.*

*இரங்குவானைப் பரிவால் காலகாலேசர் நோக்கி இயற்று என ஓதலும் (அவன்) தாழ்ந்தான் எனப் பொருள் முடிவு காண்க. கொன்னகரம் என்னும் தொடர் பெருமை மிக்க பதி என்னும் பொருளில் கொன் நகரம் எனப் பொதுவாகப் பிரிவதோடு, இமயபுரிக்குச் சிறப்பாக அமையும்படிக் கொல்நகரம் எனவும் பிரியும்படி அமைத்தது ஒரு நயம்.*

120. வணங்கிஎழும் தருமன்விழி காணும்முனம்
சிவபெருமான் மைதோய் மின்போல்
கணங்களுடன் ஆண்டமைந்த சிவலிங்கத்-
துள்(க்)கலப்பக் கண்டு வாடி
இணங்குபெரும் பத்திமையில் சிற்சிலநாள்
பூசைபுரிந் திருந்து பின்னர்
குணங்கிளர்தன் பதிஅமையும் கடமைஉன்னி
இறைவன்விடை கொள்கின் றான்ஆல். (31)

*(பொழிப்புரை) வணங்கி எழுந்த இயமன் கண்களால் பார்க்கும் முன்பே காலகாலப்பெம்மான் மேகத்தின் மின்னலைப் போலத் தமது பரிவாரங்களுடன் அங்கிருந்த சிவலிங்கத்தில் ஒன்றி மறைந்தார். இதனால் இயமன் மனம்வருந்திச் சில தினங்கள் அங்கு தங்கி அன்போடு வழிபாடு புரிந்து பிறகு தகுதிவாய்ந்த தன் ஊருக்குப்போக வேண்டிய கடமை இருப்பதைக் கருதிச் சிவபிரானிடம் உத்தரவு பெற்றுக் கொள்கிறான்.*

121. "மார்க்கண்டன் உனைப்பிடித்தல் குற்றம்என
முன்னேநான் மதித்தேன்; என்முன்
கார்க்கண்ட முடன்தோன்றி, அடிசூட்டி,
உன்பூசை காணச் செய்திச்
சீர்க்கண்டப் புரிந்தஉனை இவண்விடுத்தென்
தீவினையின் சிமிழ்ப்பால் நாயேன்
ஊர்க்கண்ட மனம்துணிந்தேன்" என்று பிரி-
யாவிடைகொண் டூர்போய் வாழ்ந்தான் (32)

*(பொழிப்புரை) "மார்க்கண்டேயர் தன் விதியின்படி இறக்கவேண்டிய நாளில் சாகச் சம்மதமின்றி, தேவரீரின் சிவலிங்கத் திருமேனியைக் கட்டிப்பிடித்துக் கொண்டு, என்னோடு வரமறுத்ததை ஒரு தவறு என்று நான் கருதினேன். எனவே என் பாசக் கயிற்றை வீசினேன். அப்போது என் முன்னே நீல கண்டத்தோடு காட்சியளித்தும், உதைத்தும், வழிபாடாற்ற வைத்தும், இன்று இந்தச் சிறப்பில் பொருந்த வைத்தும், நன்மை புரிந்த தங்களை இங்கே தனியே விட்டுவிட்டு இழிதகையேன் என்னுடைய பாவத்தின் மிகுதியால் நகரத்திற்குப் போக ஒருப்பட்டேன்" என்று விடைபெற்று இயமன் தன் ஊருக்குச் சென்று சிறந்திருந்தான்.*

*கண்டமுடன் என்பழி அத்துச் சாரியை கெட்டது. சீர்க்கு அண்ட நான்கள் உருபு ஏழன் பொருளில் வந்தது. இப்பாடல் திரிபு.*

122. முடிக்கமனம் எனக்கும்வரா தால்;தருமன்
போலநின்பொன் முளரித் தாளைப்
பிடிக்கமனத் தன்பமையேன், பேய்உலகப்
பொய்மர்யைப் பிணக்கில் வீழ்ந்து
நடிக்கமனம் படைத்தேனை விட்டுவிடேல்;
மெய்அன்பு நல்கி நின்பொன்
அடிக்கமலம் தந்தருள்வாய்; காலகா-
லேச்சுரப்பேர் அருள்(ப்)பொற் குன்றே! (33)

*(பொழிப்புரை) காலகாலப்பெம்மானாகிய பெருங் கருணைமலையே! இயமன் துதித்த தோத்திரத்தை முடிக்க எனக்கும் மனம் வரவில்லை. அவனைப் போலத் தேவரீரின் திருவடிக் கமலங்களைப் பற்றும் பத்தி இல்லாதவனாய் நிலையற்ற உலகியல் செயல்களில் மதியிழந்து உள்ளொன்றும் புறமொன்றுமாகத் திரிந்தாலும் அடியேனை விட்டுவிட வேண்டாம். உண்மையான பத்தியைத் தந்து உம்முடைய பாத பங்கயங்களில் சேர்த்துக் கொள்ளும்.*

*இது புராணத்தின் இடைப்பிறவரலான கவியின் சொந்த வேண்டுகோள்.*

123. தென்திசைக்கோன் ஆம்தருமன் புரிபூசை
கொண்டருள்மெய்ச் சீர்த்தி என்றும்
என்றிசையக் கொடுத்தருளும் காலகா-
லேச்சுரப்பேர் இறைவன் ஆட்டின்
நன்றிசைய இசைத்தனன்;மேல் கௌசிகமா
முனிவன்மகம் நவிற்றி இன்பம்
நின்றிசையப் பெறும்மாட்சி என்உள்ளத்தில்
தூண்டியவா நிகழ்த்து வேனே. (34)

(பொழிப்புரை) தெற்குத் திக்கின் தலைவனாகிய இயமன் இயற்றிய வழிபாட்டை ஏற்றுக்கொண்டு, அவனுடைய பெரும்புகழ் எந்தக் காலத்திலும் சூரியனைப் போலப் பிரகாசிக்கும்படித் திருவருள்செய்த காலகாலே சுவரப் பெம்மானின் திருவிளையாடலின் சிறப்பைப் பொருத்தமாகக் கூறினேன். அடுத்து விசுவாமித்திரர் ஆகிய பெரிய முனிவர் வேள்விபுரிந்து தமக்கு இன்பம் எப்போதும் நிலைத்திருக்குமாறு பெற்ற சரிதையின் மாண்பினை என் அகத்தில் இருந்து இறைவன் உணர்த்துகிற விதத்தில் சொல்லுவேன்.

இயமதருமன் வழிபடுபடலம் முற்றிற்று.

# *5. கௌசிக முனிவர்யாகப் படலம்*

*(அறுசீர் விருத்தம்)*

124. தவத்தின் மேம்படு கௌசிக முனிவன்முன்
தரணியில் பிறப்பெய்தி -
அவத்தின் மேம்படு பாவிகள் தமையும்கூற்று
ஆள்நகர் அடையாமல்
நவத்தின் மேம்படு தன்னுள்வாழ் காலபை
ரவர்தண்டத் தால்மாற்றிச்
சிவத்தின் மேம்படு தாள்அருள் - காசியின்
சிறப்பெண்ணி அருண்சார்ந்தான். (1)

*(பொழிப்புரை) தவத்தால் உயர்ந்த விசுவாமித்திரர் முற்காலத்தில் இவ்வுலகத்தில் பிறந்து – மிகக்கொடிய தீவினையாளர்களையும் இயமதண்டனைக்கு ஆட்படுத்தாமல் கேண்மையில் சிறந்து தனக்குள் இருக்கின்ற காலபைரவரின் தண்டனையால் அவர்கள் பாவத்தைப் போக்கி, சிவபெருமானின் மேன்மைமிக்க திருவடிகளை அளிக்கின்ற – காசிப்பதியின் புனிதத் தன்மையைக் கருதி அங்கு சென்றடைந்தான்.*

125. நிகழும் நாளையில் போதியம் பலத்திடை
நிருத்தம்செய் திடும்ஆதி
பகவன் அன்னவன் மனவெளிக் காட்சியில்
பார்க்கப்பே ரூர்காட்டித்
திகழும் காசிபை ரவர்தண்டத் துன்பினில்
தீர்க்கும்;இத் தலம்யாரும்
அகம்உ வப்புற அறப்பெரும் கருணையின்
ஆண்டினை யற்றோங்கும் (2)

126. என்ற பேர்அருள்(க்) காட்சிகண் டுளம்அழல்
இடுமெழு காய்இன்பம்
துன்ற மாண்புகழ்ப் பேரையூர் அடைந்திறை
துணைக்கழல் பணிந்தேத்தி
நன்ற ரும்பெரும் தவம்புரிந் திருவிழி
நாடுமா றெதிர்வந்து
நின்ற எம்பிரான் பால்(ப்)பல வரம்கொடு
நிறையும்இன் படைந்திட்டான். (3)

*(பொழிப்புரை) இவ்வாறு காசியில் கௌசிகர் இருக்கும் போது ஒருநாள் திருப்பேரூர் அரசம்பலத்தில் திருக்கூத்தியற்றும் பட்டிப்பெருமான் முனிவரின் மனவெளியில் திருப்பேரூரைக் காண்பித்து, காசியின் காலபைரவரின் தண்டனையாகிய துன்பமும் இல்லாமல் காக்கும் பேரூர்ப்பதி எல்லோரும் மனக்களிப்பு அடையும்படி தன் கருணையால் ஆட்கொள்ளும் காரணத்தால் இணையற்று விளங்குகிறது என்பதை உணர்த்திய மனவெளிக் காட்சியைப் பார்த்து உள்ளம் உருகி, இன்பமடைந்து, பேரூருக்குப் போய் இறைவரின் திருவடிகளை வணங்கி நன்றாக மாதவம் புரிந்து, கண் எதிரே தரிசனம் அளித்த சிவபெருமானிடம் மிகப்பல வரங்களை வேண்டிப் பெற்று மனநிறைவோடு உவகை எய்தினான்.*

127.சிறிது நாள்அவண் வதிந்தியல் தருமனால்
சிவலிங்கப் பிரதிட்டை
செறியும் அன்பினில் செய்துகா லப்பொய்கைத்
தீர்த்தமும் பெறஆற்று
நறிய கானமாய் ஒலித்தெழும் புண்ணிய
நதியின்உத் தரப்பாங்கில்
பொறிகொ ளாப்பெருங் காட்சிசால் இவ்வனம்
புலங்கொள விளங்கிற்றால். (4)

*(பொழிப்புரை) இயமதருமன் ஒரு சிவலிங்கத்தை நிறுவி, அங்கு சிலநாள் தங்கி, நிறைந்த பத்தியுடன் வழிபட்டு வந்ததுடன் தன் பெயரால் தீர்த்தம் ஒன்றையும் உண்டாக்கிய கானகமாக ஆற்றின் வடதிசையில் உள்ள தலமாகிய கௌசிகபுரம் விசுவாமித்திர முனிவரின் மனவெளியில் காட்சியளித்தது.*

128.பின்னைத் தன்பெய ரேகொடு விளங்கருட்
பிரபலத் தலம்ஆகித்
தன்னைத் தான்நிகர் காலகா லேச்சுரன்,
தழைகரு ணைத்தேவி,
முன்னைத் தேவெனும் கற்பக விநாயக
மூர்த்தி,குஞ் சரிவள்ளி
மின்னைத் தோய்அருள்(ச்) சண்முகக் கடவுள்,சீர்
விரிஅருள் நடராசன், (5)

129.ஆதி மூலம்என் றழைத்திடும் கசேந்திரற்கு
அஞ்சல்என் றருள்செய்யும்
சோதி யாம்கரி வரதரா சன்,காளித்
தோகைஆ தியர்கோயில்

நீதி யார்கரி காலனால் ஆற்றிடு
நிலையும்பின் நிகழ்இன்பச்
சேதி யாவும்தன் ஞானக்கண் காட்டலில்
தெளிவடைந் தவன்ஆகி, (6)

130. பேரை மேவிய பட்டிநா யகர்அடி
பேணுபு விடைகொண்டு
காரை மேவிய இரத்தினா சலஅருள்(க்)
கடவுளைத் தொழுதேத்தி
நாரை மேவிய புண்ணியக் கௌசிகன்
நதியில்நீர் படிந்தின்பச்
சீரை மேவிய காலகா லேசன்வாழ்
திருவனத் திடைசேர்ந்தான். (7)

*(பொழிப்புரை) பிற்காலத்தில் தன்னுடைய பெயரையே பெற்று மிகவும் பிரசித்தமான திருத்தலம் ஆகி, இணையற்ற காலகாலப் பெம்மான், கருணாகரவல்லி, முதன்மைக் கடவுளாம் கற்பக விநாயகர், தெய்வயானை வள்ளியுடன் அமர் ஆறுமுகப்பெருமான், கருணை மிக்க ஆடல்வல்லான், ஆதிமூலமே எனக் கூப்பிட்ட கஜேந்திரனுக்கு அருள்பாலித்த கரிவரதப் பெருமாள், கௌசைக் காளி முதலிய சந்நிதானங்கள் செங்கோல் மன்னனாம் கரிகாலனால் நிறுவப்பட உள்ள செயலும் மற்றும் எதிர்காலத்தின் மகிழ்ச்சிகள் எல்லாவற்றையும் தன் ஞானக்கண் காட்டுவதைப்பார்த்து அத்தலத்தைக் காண உறுதிபூண்டு, பேரூர்ப் பட்டிநாயகரை வணங்கி விடைபெற்று, வானளாவிய இரத்தினாசல முருகனைப் பணிந்து போற்றி, புனிதமான கௌசிகமுனிவர் நதியில் நீராடி ஆனந்தமயமான காலகாலேசன் வாழ்கின்ற காட்டினை அடைந்தார்.*

131. தண்ட தீர்த்தத்தின் மூழ்கிநல் மஞ்சனம்
சங்கரன் றனக்காட்டி,
சண்ட னுக்கருள் காலகா லேச்சுரன்-
றனக்கருச் சனைஆற்றி,
"அண்டர் நாயக! திருக்கரு ணாகர
அம்பிகை இடப்பாகம்
கொண்ட பேரருள் வாரியே!" எனப்பல
கூறுபு துதித்திட்டான். (8)

*(பொழிப்புரை) காலப் பொய்கையில் குளித்து, சிவபெருமானுக்கும் புனித நீராட்டி, காலகாலனுக்கு அருச்சனை செய்து, "தேவதேவா! மாதொருபாகா! கருணைக் கடலே" என்று பல தோத்திரங்களை இசைத்தான்.*

132.“கொங்கு நாட்டணி பெற்றசீர்க் காஞ்சியின்
குளிர்கரை வடபாலில்
பொங்கு சீர்பெறும் யாகம்வே தன்முனம்
புரிந்திடும் திறம்போல
மங்குல் ஆர்பொழில் சூழ்நதிப் பால்அருள்
மகம்புரிந் ததன்பேற்றால்
இங்கு மேவினர் துன்பகன் றின்பம்மிக்கு
இசையஆற் றுவன்”என்றே, (9)

*(பொழிப்புரை) “கொங்கு நாட்டில் அழகிய நொய்யலாற்றின் குளிர்ந்த வடக்குக் கரையில் பிரமன் பண்டைக் காலத்தில் ஒரு வேள்வி இயற்றியதைப் போல, வானளாவிய சோலைகள் சூழ்ந்த இந்த ஆற்றங்கரையிலும் ஒரு யாகத்தைச் செய்து இங்குள்ளவர்களின் வருத்தங்களைப் போக்கி மகிழ்ச்சியைத் தருவேன்” என்று எண்ணி,*

133.புனிதம் ஆர்களம் கண்டருள் நலம்மிகப்
பெறஉழு வித்துள்ளக்
கனிவில் வான்தொடும் சாலைஒன் றியற்றுபு
கவின,வே திகைகுண்டம்
நனிஉ றக்குறித் துயர்தண்ட யூபமும்
நவில்சமி தைகள்ஆதி
இனிய பண்டங்கள் குறைஅறத் தொகுத்தனன்
இயற்றுமெய்த் தவப்பேற்றான். (10)

*(பொழிப்புரை) முன்னைத் தவம் ஆகிய செல்வத்தை உடைய விசுவாமித்திர முனிவர் வேள்வி செய்வதற்குரிய தூய இடத்தை ஆராய்ந்தறிந்து, அந்த இடத்தை நன்றாக உழச்செய்து, அன்போடு மிக உயரமான கூரையோடு கூடிய யாகசாலை அமைத்து, மேடைகள் குண்டங்கள் ஆகியவற்றை மரபு பிறழாமல் நன்கு இயற்றி, வேள்விக்குரிய யூபத்தூண், அக்கினியில் சமர்ப்பித்தற்குரிய ஓமக்குச்சிகள் முதலிய நல்ல பொருள்களை நிறையச் சேகரித்தார்.*

*வேள்வியிலும் கொலையை மறுப்பதுதான் கௌமாரநெறி. “வேதம் கொல் வேள்வி விதிக்கும் என நம்பும் அவர் போதங்கள் அத்தனையும் பொய்” "கூட்டம் பெருக்கி உயிர்கொன்று அனலில் வெந்தருந்தி வேட்டவர் தாம் தம்அளவில் மெய்யாய வான்தடங்கண் மின்னாரை யன்ன வியன் உலகில் தோய்ந்து முன்பு தின் ஆகம் கொள்வார் திறம்." என்பன சாத்திரம். இதனைக் கருதியே இனிய பண்டங்கள் தொகுத்தனன் என்றார். கொலை வேள்வி அன்று என்றபடி.*

134. வஞ்சு ளத்தரு ஆணியின் ஞெலிதழல்
வாங்கி,ஓங் கிடமூட்டி,
மஞ்சு சூழ்ந்துல கப்பொருள் களைஎலாம்
மறைத்ததோ எனஉள்ளார்
நெஞ்சு ளேகொள, வானுல கத்தினும்
நிமிர்ந்தது மணத்தூமம்-
விஞ்சு சீர்க்கரு ணாகர வல்லிதன்
விசுவரூ பம்போன்றே. (11)

*(பொழிப்புரை) வேங்கை மரத்தால் செய்யப்பெற்ற தீக்கடைகோல் கடைந்து ஏற்றப்பெற்ற நெருப்பை எடுத்து வளர்த்து வேள்வி தொடங்கினான். நறுமணம் மிக்கபுகை எழுந்து உலகில் உள்ள எல்லாவற்றையும் மேகங்கள் மறைத்து விட்டதோ எனக் கண்டோர் கருதும்படி வானுலகத்தையும் நிறைத்தது; அக்காட்சி கருணாகரவல்லி விசுவரூபம் எடுத்ததைப் போல விளங்கியது.*

135. "கமல மீதமர்ந் தான்சிருட் டியின்மலம்
கலந்து, வன் காய்போன்றீர்!
விமலம் ஆம்கனித் தகைமையில் குழைந்துளம்
மெய்அன்பு மயம்ஆகி,
அமல காலகா லேசனை எனைத்தொடர்ந்து
அடைந்துவாழ் குதிர்" என்னச்
சிமயம் அன்னமெய்த் தவன்விடும் தூதரைச்
சிவணும்அப் புகைஅம்மா! (12)

*(பொழிப்புரை) "பிரமனின் படைப்பிற்குட்பட்டு, ஆணவம் முதலிய மும்மலங்களில் சிக்குண்டு வலிய காயைப் போலக் கெட்டியான உள்ளத்தை உடைய உலகோரே! குற்றம் இல்லாத பழத்தைப் போன்று அகம் கனிந்து, பக்தி மயமாகவே மாறி, என்னைத் தொடர்ந்து வந்து இயல்பாகவே மலங்களில் நீங்கியவராகிய கால காலப்பெம்மானைச் சரணடைந்து உய்வீர்களாக" என்று மலையளவு மாதவம் புரிந்துள்ள கௌசிக முனிவர் நான்கு திக்குகளிலும் அனுப்பிய தூதுவர்களைப் போன்று வேள்விப் புகை எல்லா இடங்களிலும் பரவியது. அம்மா – வியப்பிடைச் சொல்.*

136. சுருவத் தான்முறை முறைமிக மிகநெய்யைச்
சொரிவித்தங் கதனூடே
மருவத் தான்முனம் இட்டன அதில்நின்றும்
வந்தன பொருள்எல்லாம்
பருவத் தால்அமை இமையவர் ஆதியோர்
பருகநல் கினன் - உற்ற
உருவத் தால்மன்ன னப்பிரா மணத்தகை
உயர்தவத் தால்பெற்றான். (13)

*(பொழிப்புரை) வாய்த்த உடலால் அரசனாகவும் உயர்ந்த தவத்தின் பயனாக அந்தணத் தன்மை பெற்றவனாகவும் உள்ள கௌசிக முனிவன் வேள்வியில் நெய் ஊற்றுவதற்குரிய மரக்கரண்டியால் மரபு பிறழாமல் மிகுதியான நெய்யைச் சொரியச் செய்து, அந்நெய்யையும், முன்னம் யாககுண்டத்தில் இட்டிருந்த ஆகுதிப் பொருள்களையும், வேள்வியில் இருந்து வந்த நறுமணப் புகை முதலியவற்றையும் தங்கள் நல்வினைப் பயனாக இப்போது பல்வேறு சுவர்க்கப் பதவிகளில் உள்ள கடவுளர்கள் முதலியோர் உண்ணுமாறு வழங்கினார்.*

137. சிவப்பி ரீதியாய் ஆருயிர்த் திரள்எலாம்
சிந்தையின் கண்மாறா
உவப்பின் மூழ்கிடத் தான்அடை தரும்பயன்
ஒன்றுளத் திடைநாடாத்
தவப்பி றக்கம்ஆர் கௌசிகன் இவ்வணம்
தழைத்தவேள் விகள்ஆற்றி,
அவப்பி றப்பிறப் பென்றியல் பிணிஅவண்
அடுத்தவர்க் கறுத்தானால். (14)

*(பொழிப்புரை) தனக்காக எந்த வகையான பயனையும் சற்றும் விரும்பாதவராகிய விசுவாமித்திரர் சிவபிரானுக்கு மெய்யன்புடன் அர்ப்பணிக்கப்படுவதாகவும், உலகத்தின் உயிர்கள் யாவுமே குறையாத மகிழ்ச்சியை அடையவும் வேண்டி இத்தகைய யாகங்களைச் செய்து, அந்தக் கௌசிகபுரிக்கு வந்தவர்கள் எல்லோருக்கும் சனனமரணங்கள் என்னும் நோய் இல்லாமல் செய்தார்.*

138. துரிய மெய்ந்நிலைக் கௌசிகன் யாகவான்
தூமம்எய் தலினாலே
கரியன் ஆகினன் இந்திரன்; அவன்பரி
கரிஎனப் படும்தன்பேர்
உரிமை காட்டிற்று, வான்நின்றும் உணர்தர
ஓங்கிய தவ்வண்ணம்;
பெரிய காலகா லேசனார் திருவருள்(ப்)
பெருக்கம்என் புரியாதே? (15)

*(பொழிப்புரை ) நினைவு (சாக்கிரம்), மயக்கம் (சுழுத்தி), கனவு (சொப்பனம்) ஆகிய மூன்றையும் கடந்த நான்காவது அவத்தையில் உள்ள விசுவாமித்திரர் புரிந்த வேள்வியின் புகை வானுலகைச் சென்று பொருந்தியதால் இந்திரன் கரிய நிறம் உடையவனாகி விட்டான். அவனுடைய வாகனம் ஆகிய வெள்ளை யானை கரி என்னும் பெயருக்கேற்பக் கரிய நிறத்தது ஆகி விட்டது. அந்தப் புகையின் நிறம் ஆகாயத்தில் பரந்து தன் தனித்தன்மை புலப்படுமாறு சிறந்து விளங்கிற்று. சிவபிரானின் அருள் எதைத்தான் செய்யாது.*

*வான் நின்றும் என்புழி உன்மை இசைநிறை.*

139. மீது போந்திடும் காரியப் புகைபுரி
விம்மிதங் களைநாக்கொண்டு
ஓது தற்கரி தென்றுளம் அஞ்சிடும்
உரம்இலேன் அதுதோன்றற்கு
ஏது வாநிகழ் அங்கியின் சிறப்பையும்,
எய்தும்அங் கதைத்தாங்கும்
தாது வாத்திகழ் குண்டத்தின் மகிமையும்
சாற்றுரம் பெறுவேனா? (16)

*(பொழிப்புரை) மேலே செல்கின்றதும் (தீயாகிய காரணத்தில் தோன்றிய) காரியமுமாகிய புகை செய்கின்ற வியத்தகு செயல்களையே வாயால் உரைக்க அரிது எனப் பயப்படுபவனாகிய கல்விவல்லமை இல்லாத அடியேன் அப்புகை உண்டாவதற்குக் காரணமான வேள்வித்தீயின் மேன்மையையும், அந்த நெருப்பைத் தாங்கும் கற்களாக விளங்கும் யாககுண்டத்தின் மாண்பையும் புகழ்வதற்குரிய அறிவு வளத்தை அடைய வல்லவனோ?*

140. சொன்மு டிந்தசீர் பொலிஅதன் நிலைசொலத்
தூண்டிடும் என்இச்சைக்கு
என்மு டிந்திடும்? தான்பல பிறப்பினும்
ஈட்டும்ஐம் கொடும்பாவம்
முன்மு டிந்திடும்; கன்முடிந் திடும்மன
முரண்என்பு கரைஇன்பாய்ப்
பின்மு டிந்திடும் பிறப்பிறப் பென்றியல்
பேதைமை யுடன் மாதோ. (17)

*(பொழிப்புரை) சொற்களுக்கு அப்பாற்பட்ட அந்த வேள்வியின் மாண்பைச் சொல்ல விழையும் என் ஆசையால் என்ன ஆகும்? பல பிறவிகளிலும் ஐம்புலன்களாலும் புரிந்த செயல்களால் தொகுக்கப் பெற்ற பாவங்கள் எல்லாம் அழிந்து விடும். பாறையைப் போல இறுகியிருக்கும் மனத்தின் கடுமை எலும்பும் கரையும்படி இன்பம் தரும் பக்தியாய் மாறிவிடும். சனன மரணங்களாகத் தொடரும் அறியாமையும் அழியும்.*

*விசுவாமித்திரர் செய்த யாகத்தின் சிறப்பைக் கூற மனதில் விருப்பம் கொண்டாலே கிடைத்தற்கரிய பயன்கள் கிடைக்கும் என்றவாறு.*

141. மூண்டு மங்கலம் பெறவலம் சுழித்தெழு
முளரியின் மிகுவெப்பம்
கீண்டு பாதலம் வரையும்கீழ்ப் போய்ப்புவி
கிளர்அகல்(ப்) பரப்பின்கண்
யாண்டு தாக்கிய தோஅது புண்ணியம்
இசைந்துமே வினர்க்கம்ம
நீண்டு மெய்ப்பயன் அனந்தம்ஆம் படிபெற
நிறைக்கும்ஐ யுறவின்றே. (18)

*(பொழிப்புரை) கிளர்ந்தெழுந்து, நன்மை பெற வலமாகச் சுழித்து ஓங்கிய வேள்வித்தீயின் அதிகமான வெம்மை நிலத்தைக் கிழித்துக் கொண்டு பாதலம் வரை கீழே சென்று அகலமான நிலப்பரப்பில் எங்கே தாக்கியதோ அந்த இடம் நல்வினை பொருந்தி அங்கு வாழ்பவர்களுக்கு நிலைத்த நற்பயன்களைக் கணக்கின்றி நிறைக்கும் என்பதில் ஐயம் இல்லை.*

142. போற்றும் அந்நிலை தான்இன்றும் மேலினும்
புவிஉளோர் மணல்எனச்
சாற்றும் மாறிலாத் தன்மைவாய்ந் திலகருள்ச்
சரதம்ஆம் கரிகாட்டும்;
நீற்று மேட்டின்மண் காலவான் பொய்கையின்
நீரினால் குழைத்தே, தம்
மேற்றி மிர்ந்துகௌ சிகநதி மூழ்கில்தீ-
வினைகள்முற் றொழிவாம் ஆல். (19)

*(பொழிப்புரை) மதிப்பிற்குரிய அந்த நிலைமை இந்நாளினும், எதிர்காலத்திலும் இவ்வூரில் வசிப்பவர்கள் மணல் எனக் கூறும் தகைமை பெற்று, இறையருளின் சத்தியத்திற்குச் சாட்சியாக உள்ளது. இந்தத் திருநீற்று மேட்டின் மண்ணைத் தண்டதீர்த்தத்தின் தண்ணீரால் குழைத்து உடம்பில் பூசிக்கொண்டு கௌசிகநதியில் நீராடினால் பாவங்கள் எல்லாம் முற்றிலும் நீங்கிவிடும்.*

143. இன்ன வாறுகௌ சிகன்பன்நாள் இருந்து, பல்
யாகமும் இனிதாற்றி,
கன்னல் வில்(க்)கரு ணாகர வல்லிதோய்
காலகா லேசன்செம்
பொன்ன டித்துணை அருச்சனை ஆதிய
புரிந்து,வாழ்ந் துறுநாளில்
மன்ன ருட்சிவக் குறியினும் அவன்கண்முன்
வந்தனன் சுரர்போற்ற. (20)

*(பொழிப்புரை) இவ்வாறு விசுவாமித்திரர் இங்குப் பலநாள் தங்கி, பல வேள்விகளைச் செய்துகொண்டும், கருணாகரவல்லியுடன் அமர் காலகாலப் பெம்மானின் திருவடிகளுக்கு அருச்சனை முதலிய வழிபாடுகளைப் புரிந்து கொண்டும் இருக்கும் காலத்தில் ஒரு நாள் தேவர்களும் போற்றும்படிச் சிவபெருமான் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு முனிவருக்குத் தரிசனம் தந்தார்.*

*சிவக்குறியினும் என்புழி உம்மை இசை நிறை.*

144. தவளம் ஆர்திருக் கயிலைவான் பொருப்பெனும்
தருமவெள் விடைமீதில்
பவளம் ஆர்செழும் சோதியின் கிரணங்கள்
பரந்தவிர்ந் திசைமெய்ப்பால்
துவள ருட்பசும் கொழுங்கொடி மீதிரு
தூயபொற் கிரிநாணும்
அவள வாம்திரு ஞானவான் குடம்மதர்த்து
அணைந்தியல்(ச்) சுகம் நல்க (21)

*(பொழிப்புரை) வெண்மை பொருந்திய கயிலாயத்தைப் போன்ற நிறமும் பருமையும் பெற்ற அறத்தின் வடிவமாகிய ரிஷப வாகனத்தின்மேல், பவளத்தைப் போல் செவ்வொளி பரப்புகின்ற திருமேனியின் இடப்பாகத்தில் ஒசிகின்ற கொழுமையான பச்சைக் கொடி போன்ற கருணாகர வல்லியின் இரு குன்றுகளைப் போன்றதும் ஞானமயமானதுமாகிய பருத்த நகில்களால் அணையப் பெறும் இன்பம் பொருந்தி, (இது குளகமாகத் தொடரும்.)*

145. கண்ட கண்ணினைக் கருத்தினை அக்கணம்
கவர்ந்தடக் கிடும்வெற்றி
கொண்ட பான்மையில் தனக்குமே லவர்இனம்
கூறியற் புகழ்எல்லாம்
விண்ட வாறருள்(த்) திருவடி களில்ஒளிர்
வீரகண் டைகள்ஆர்ப்பத்
தொண்டர் வாள்விழி கூசுறா திசைஒளி
தோல்இனம் மேல்மூட, (22)

*(பொழிப்புரை) தரிசித்தவர்களின் விழிகளையும் கருத்தையும் அப்பொழுதே தன்பால் ஈர்த்துக்கொள்ளும் படியாகவும், தன்னைச் சான்றோர் கூட்டம் போற்றிய தோத்திரங்கள் அனைத்தையும் கூறுவதைப் போலக் கால்களில் அணிந்துள்ள வீரமணிகள் ஒலிக்கவும், காணும் அடியார்களின் கண்கள் திருமேனி ஒளியால் கூசாதபடி யானை புலித்தோல்களால் மெய்யை ஓரளவு மூடிக்கொண்டும், (குளகம்)*

146 பவள மத்தியில் பதித்தநித் திலம்எனப்
பகைவர்முப் புரம்சுட்ட
தவள மூரல்புன் முறுவல்காட் டிடச்செவித்
தலம்கொள்குண் டலம்ஆட,
திவள ணிச்சடை மீதில்அம் பிறை,அரா,
திரைகொள்கங் கையும்ஆட,
இவள வென்றிடா அருள்நலம் துளும்புகண்
இனங்களொா டெதிர்நின்றான். (23)

*(பொழிப்புரை) பவளத்திற்கு நடுவே பதிக்கப் பெற்ற முத்தினைப் போன்று முப்புரம் எரித்த புன்னகை வெள்ளொளி வீச, காதுகளில் குண்டலங்கள் ஆட, அசைகின்ற அழகிய சடாமுடியில் பிறைச்சந்திரனும், பாம்புகளும், கங்கை ஆறும் ஆட, கருணையின் அளவு இவ்வளவுதான் என்று கூற இயலாதபடிக் கண்களில் திருவருள் ததும்பி நிற்க (சிவபிரான் முனிவரின்) எதிரே நின்றார்.*

147. அருட்பெ ரும்கடல் இன்னஅற் புதங்கள்கொண்டு
அணைதரத் தவம்தோயும்
தெருட்பெ ரும்குணக் கௌசிகன் அன்பினால்
தெண்டனிட் டினிதேத்தி,
"மருட்பெ ரும்கொடு மாயைகன் மங்கள்ஆம்
மலங்கள்நல் கிடும்தாய்நேர்
இருட்பெ ரும்கொடு மூலவல் இருள்அற
எழுந்தபேர் ஒளியேயோ! (24)

*(பொழிப்புரை) கருணாசாகரமாகிய இறைவன் இத்தகைய சிறப்புக்களோடு தரிசனம் தர, மாதவமும் பண்பும் நிறைந்த விசுவாமித்திரர் பத்தியோடு வணங்கிப் போற்றி, "மயக்கத்தைத் தரும் இயல்புடைய மாயை, கொடுமையான கன்மம் ஆகிய இரு மலங்களையும் தோற்றுவிக்கும் அன்னையைப் போன்ற பேர்இருள் ஆகிய மூல மலமாம் கொடிய ஆணவம் வலி குன்றும்படி தோன்றிய பெரிய ஒளி வடிவமோ!*

148. "கோலம் ஆகிமண் இடந்தெகி னத்துருக்
கொண்டுமேல் பறந்துஎய்த்து,
காலம் எண்ணில கடந்தும் அளவெலாம்
கடந்தநின் திருக்கோலம்
மால யன்பெறற் கரிதெனும் மறைஎதிர்
மறைபெற முன்வந்தாய்;
சால அன்னவர்க் கெளியனேன் பெரியனோ?
தண்ணருள் செயல்வேண்டும். (25)

*(பொழிப்புரை) பன்றி வடிவெடுத்து நிலத்தை அகழ்ந்தும், அன்னப் பறவையாக வானில் பறந்தும் கணக்கற்ற காலம் கழியும்வரை திருமாலாலும் பிரமனாலும் காணமுடியாத அளவு எல்லாத் தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டு விளங்குவது தேவரீரின் திருவடிவம் என்று கூறும் வேதமொழிகளுக்கு விரோதமாக என்முன் காட்சி அளித்தீரே? அடியேன் அவர்களைவிட மிகப்பெரியவனோ? குளிர்ந்த திருவருள் பாலிக்கவேண்டும்.*

*எளியவன் சிறியவன் தான்; தங்கள் தண்ணளியே சாலப் பெரிது என்பது கருத்து.*

149. "செருக்க மைந்துளோர் பலஉப கரணங்கள்
திரண்டிடச் செயும்பூசைப்
பெருக்கந் தன்னில்நீ உவப்புறா உண்மைஉள்(ப்)
பெரிதுணர்ந் தனன்;அன்பால்
உருக்கம் மிக்கவர்ப் பிரிகிலா துடன்உறைந்து
உவப்புற மெய்ச்சேவை
பொருக்கென் றீதலால் சச்சிதா னந்தமெய்ப்
பூரணப் பொருளேயோ?" (26)

*(பொழிப்புரை) தற்பெருமை உடையவர்கள் பூசைக்குரிய பற்பல பொருள்களைத் தொகுத்து வைத்துக்கொண்டு புரியும் மிக ஆடம்பரமான வழிபாடுகளால் தேவரீர் மகிழ்ச்சி அடைவதில்லை என்னும் சத்தியத்தை உள்ளத்தால் உணர்ந்தேன். பத்தியால் உள்ளம் உருகும் அன்பர்களை எப்போதும் விட்டு அகலாமல் அவர்களுடனேயே இருப்பதோடு அவர்கள் மகிழும்படி உண்மையான தரிசனத்தைத் திடீரென்று தருவதால் சத்தியஞான இன்பமயமான பரம்பொருள் நீர்தாமோ?*

150. என்று போற்றிடப் பரசிவன் உளம்மகிழ்ந்து,
"இணைஇல்கௌ சிகமேலோய்!
நன்று; நன்றுநீ புரிவழி பாடெலாம்
நனிஉவந் தேற்றேம்; நீ
இன்று வேண்டுவ நல்குதும் கேள்;நினக்கு
ஈந்திடாப் பொருள்உண்டோ?
ஒன்றும் அஞ்சலை; உரை"என, "நீஉற
ஒரு குறை எனக்கென்னே? (27)

*(பொழிப்புரை) எனப் பலவிதமாகத் துதிக்கச் சிவபெருமான் மனம் களித்து, "நிகரற்ற விசுவாமித்திரனே! உன் பூசையை மகிழ்ச்சியுடன் அங்கீகரித்தோம். உனக்கு இப்போது வேண்டும் வரங்களைக் கேள்; தருகிறோம். உனக்குக் கொடுக்கக்கூடாதது எதுவும் இல்லை. எதற்கும் பயப்படவேண்டாம். என்ன வேண்டும்? கேள்" என்று உரைத்தருளினார். மறுமொழியாகக் கௌசிக முனிவர், "அடியேனுக்கு உறுதுணையாகத் தேவரீர் இருக்கும்போது குறைகள் எப்படி இருக்கும்?*

151. "ஆயி னும்,பிற உயிர்களின் பொருட்டில்எற்கு
அருள்புரிந் திடல்வேண்டும்;
தாயி னும்பொலி கருணையால்! இத்தலம்
தமியனேன் யாகத்தால்
தூயி யற்கைவாய்ந் திட்டதால், என்பெயர்
துலங்குவான் பதியாய்நீடு
ஆயி ருங்கரு ணாகர வல்லிஆ -
தியர்பெரும் தளிவாய்ந்தே. (28)

*(பொழிப்புரை) என்றாலும் மற்ற பசுவர்க்கங்களுக்காக எளியேனுக்குச் சில வரங்களைத் தந்தருள வேண்டும். அன்னையினும் மிகுதியான அன்பினை உடைய பெருமானே! அடியேனின் வேள்வியால் பரிசுத்தம் பெற்றுள்ளதால் இந்தப் பதி என்னுடைய பெயர் பெற்று சிறந்த புனிதத் தலமாகக் கருணாகரவல்லி ஆகியோரின் சந்நிதிகளும் அமைந்து, (குளகமாகத் தொடரும்.)*

152. விளங்க வேண்டும்; இந் நதியும்என் பேர்கொடு
விரவவேண் டும்; இங்஑ஙன்
வளங்க வின்றிட யான்புரி யாகங்கள்
மருவிடத் தமைநீறால்
சளங்க டந்துமா னிடர்கள்மெய்ப் பிணிஎலாம்
தவிர்தல்வேண் டும்; போற்றென்
உளங்க லந்துநீ இருந்திடல் வேண்டும்" என்று
உரைத்தடி பணிந்திட்டான். (29)

*(பொழிப்புரை) விளங்க வேண்டும். இந்த ஆறும் என் பெயரால் கௌசிக நதி என வழங்கப்பட வேண்டும். இந்த ஊரில் தெய்வீகம் மிகும்படி எளியேன் வேள்விகளைச் செய்த இடத்தில் இருக்கும் திருநீற்றால் மனிதர்களின் நோய்களும் துன்பங்களும் நீங்கவேண்டும். தேவரீரைத் தியானிக்கும் அடியேனின் உள்ளத்தில் எப்போதும் தாங்கள் குடிகொண்டிருக்க வேண்டும்" என்று வேண்டித் திருவடிகளில் வணங்கினார்.*

153. "நீக னிந்தெம்பால் வேண்டிய வரம்எலாம்
நேர்ந்தனம் உவப்புற்றோம்;
பாகம் ஆர்தவக் கௌசிக! நலம்எலாம்
பற்றுதி" எனச்சாற்றி,
மேகம் ஆர்மின்போல் அருட்சிவக் குறியினுள்
விரவினன் என்போன்றார்
மோக மும்தெறும் காலகா லேச்சுர
முத்திவித் தாம்தேவே. (30)

*(பொழிப்புரை) அடியேனைப் போலக் கீழ்நிலையில் இருப்போரின் மாயையையும் போக்குகின்றவரும், வீட்டின்பத்தை அருளும் காரணரும் ஆகிய காலகாலப்பெருமான், "நீ கருணையால் எம்மிடம் யாசித்த எல்லா வரங்களையும் தந்தோம். நல்ல பக்குவம் வாய்ந்த விசுவாமித்திர முனியே! உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக" என உரைத்து, மேகத்தின் மின்னலைப் போல ஒரு கணத்தில் சிவலிங்கத்தில் கலந்தார்.*

154. தெள்ளி யோர்உணர் புகழ்அருள்(க்) கௌசிகத்
திருமுனி உற்றன்பர்
உள்ளி சைந்தருள் காலகா லேச்சுரற்கு
ஓகையா கம்செய்தே
நள்ளி ரும்பயன் பெறல்சொனேன் இனிநலம்
மருவிடக் கரிகால்(ப்)பேர்க்
கிள்ளி ஆற்றிய திருப்பணித் திறத்தினில்
கிளத்துவன் சிறிதம்மா! (31)

*(பொழிப்புரை) தெளிந்த அறிஞர்களால் உணரப்படும் கீர்த்தியை உடைய கௌசிக முனிவர் இத் தலத்திற்கு வந்து, அடியார்களின் உள்ளத்தில் கோவில் கொண்டு விளங்கும் காலகாலப் பெம்மானைக் குறித்து, மகிழ்ச்சியோடு வேள்விகள் புரிந்து, தான் விரும்பிய பெரிய பயன்களைப் பெற்ற வரலாற்றை உரைத்தோம். அடுத்துக் கரிகாலன் என்னும் பெயரை உடைய சோழ வேந்தன் நன்மைகள் பொருந்துமாறு செய்த திருப்பணிகளின் சிறப்புக்களில் சிலவற்றைச் சொல்லுவோம்.*

*கௌசிக முனிவர் யாகப் படலம் முற்றிற்று*

## *6. கரிகாற்சோழன் திருப்பணிப் படலம்*

*(அறுசீர் விருத்தம்)*

155.மன்னு புகழ்க்கா விரிநதியால்
வளம்சால் சோணா டரசாற்றித்
துன்னும் இறைவிக் கிரமசிங்க
சோழன் எனும்பேர் காரணமாப்
பன்னும் முறையில் கலிஒதுக்கிப்
பார்ஆள் பவன்பால்(க்) கரிகாலன்
என்னும் பாலன் பாற்கடலில்
எழும்மா மதியில் உதித்தனன். ஆல். (1)

*(பொழிப்புரை) நிலைத்த புகழ் பெற்ற காவேரியால் வளம் பெருகும் சோழ நாட்டை ஆண்டுவந்த விக்ரமசிங்க சோழன் என்பவன் தன் பெயருக்கேற்ப தீமைகளை எல்லாம் வெற்றிகொண்டு அழித்துச் சிறந்திருந்தான். பாற்கடலில் முழுச் சந்திரன் தோன்றியதைப் போல அந்த விக்கிரமனுக்கு மகனாகக் கரிகால் சோழன் பிறந்தான்.*

156 மற்போர் தன்னில், விற்போரில்,
மாஏற் றம்,தோல் ஏற்றத்தில்,
சொற்போர் வெல்லும் கல்வியினில்,
துதையும் பலவித் தைத்திறத்தும்
கற்போர் வியப்பத் தெளிவமையும்
காலம் தன்ஓர் மைந்தனுக்குப்
பொற்போர் வடிவாம் பெண்ணைமணம்
புரிவித் தான்விக் கிரமசிங்கன். (2)

*(பொழிப்புரை) மல்யுத்தம், விற்போர், குதிரையேற்றம், யானை ஏற்றம், வாதில் வெற்றி தரும் கல்வி, மேலும் பல வகையான கலைகளிலும் கரிகாலன் அறிஞர்கள் அதிசயிக்கும்படி மிக்க திறமை வாய்ந்தவனாக ஆனபோது விக்கிரம சோழன் அழகே வடிவெடுத்து வந்தது போன்ற பெண் ஒருத்தியைத் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைத்தான்.*

157.மகவான் நிகர்ப்பக் கரிகாலன்
வளநா டளிக்கும் கால்,குடிகட்கு
இகலாய் விருகம் பயிர்அழிக்கும்
இயல்கேட் டிரங்கி, அவைசாட,
நகம்ஆர் வனம்சேர்ந் துறுவேட்டை
நவிற்றி, உற்ற களைதீர்வான்
சுகம்ஆர் தடத்தின் தருநிழலில்
துதைகால் போந்த தொருகேழல். (3)

*(பொழிப்புரை) கரிகாற் சோழன் இந்திரனைப் போன்ற சிறப்போடு சோழ நாட்டை ஆண்டு வரும் போது, குடிமக்களுக்குத் தொந்தரவாகப் பல விலங்குகள் பயிர்களை நாசம் செய்கின்ற செய்தியைக் கேள்வியுற்று, கருணை கொண்டு, அம் மிருகங்களை அழிப்பதற்காக மலையைச் சார்ந்துள்ள காடுகளில் வேட்டை ஆடி, சோர்வடைந்து, இளைப்பாறுவதற்காக இனிய குளத்தின் கரையில் ஒரு மரத்தின் நிழலில் இருந்தபோது ஒரு பன்றி எதிர்ப்பட்டது.*

158.மருவி ஒருபால் நீர்அருந்த
மன்னன் வில்லின் அம்பதனை
உருவி ஓட விடஇறந்தது;
உடன்அங் கதில்நின் றொருபூதம்
வெருவி அரையன் விழத்தோன்றி,
"வேந்தா! பன்றி அன்றுநான்;
ஒருவிப் பிரன்;என் தவத்தை உற்றார்
ஒழியா திக்கோ லம்கொண்டேன். (4)

*(பொழிப்புரை) அப் பன்றி குளத்தின் ஒரு கரையில் தண்ணீர் குடிக்க, அதனைப் பார்த்த மன்னன் அம்பெய்துவிட அது இறந்து விழுந்தது. உடனே அதன் உடலிலிருந்து ஒரு பூதம் மன்னன் அஞ்சி விழுமாறு தோன்றி, "அரசனே! நான் பன்றி அல்லன்; ஒரு வேதியன். என் தவத்திற்கு என் உறவினர்கள் இடையூறு செய்யாமல் இருப்பதற்காக இந்த வடிவத்தை எடுத்துக் கொண்டேன்.*

*பேரூர்ப் புராணத்தில் இவ் வரலாறு விரிவாக உள்ளது. அதில் அந்தணனின் பெயர் சுவிர்த்தி எனக் கூறப்பட்டுள்ளது. அந்தணனின் வானப்பிரத்தத்திற்கு இடையூறாக மனைவியும் உறவினரும் தொடர்ந்து வந்த காரணத்தால் அவர்களுக்குத் தெரியாமலிருக்கும்பொருட்டுப் பன்றி வடிவெடுத்துக் கொண்டதாக உள்ளது.*

*(காண்க:கரிகாற்சோழன் கொலைப்பழிதீர்த்த படலம் 17–25)*

159 கோலக் கோலம் மாற்றி,அலங்-
கோலம் எனக்கு நல்குனைஇக்
காலத் தகலேன் என்றுள்அகங்-
கரித்துப் பற்கள் கறித்தொறுக்கச்
சீலக் குணத்துக் கரிகாலன்
சிந்தை தளர்ந்து செயல்அற்றுப்
பாலத் தழல்(க்)கண் பரன்அன்பார்
பனவர்க் கோதி ஒழிபிரந்தான். (5)

*(பொழிப்புரை) பன்றி வடிவத்தை ஒழித்து இந்த அழகற்ற வடிவை எனக்குத் தந்த உன்னை இப்போது விடமாட்டேன்'' என்று ஆங்காரத்தோடு பற்களைக் கடித்துக் கொண்டு சொல்ல, நல்ல பண்பினை உடைய கரிகாலன் மனம் கலங்கி, செய்வதறியாமல் சிவனடியார்களாகிய அந்தணர்களிடத்தில் இந்தப் பாபத்திற்குரிய கழுவாயை வேண்டினான்.*

160. சதுர்மா மறையோர், "சிவதலங்கள்
தரிசித் தால்போம்" எனநுவல,
பொதுஆர் தில்லை முதல்(த்)தலங்கள்
போற்றிப் பணிந்தும் தீராதாய்,
விதுஆர் கடலில் துயர்ந்திரங்கும்
வேலை தனில்,விண் வழிப்போந்த
மதுவார் மகதி யாழ்முனிவன்
வரக்கண் டடிவீழ்ந் தழுதயர்ந்தான். (6)

*(பொழிப்புரை) வேதியர்கள், "சிவ தலங்களைத் தரிசித்தால் இப் பாவம் போய்விடும்'' என்று சொல்லச் சிதம்பரம்முதல் பற்பல கோயில்களைக் கண்டு பணிந்தும் நீங்காததால் துயரக் கடலில் ஆழ்ந்து தவிக்கும்போது, ஆகாய வழியில் சென்று கொண்டிருந்தவர் ஆகிய இசைத்தேன் பொழியும் மகதி என்னும் யாழினை மீட்டுகின்ற நாரதரைக் கண்டு, அவர் திருவடிகளை வணங்கித் தன் நிலையைக் கூறிக் கரிகாலன் அழுதான்.*

161. தெய்வ முனிவன் சோழனை,"அஞ்-
சேல்"என் றருளி, "நீபலவாம்
சைவத் தலம்சார் புண்ணியத்தால்
சார்ந்தேன்; உனது பழிநீக்கி,
உய்வற் புதம்சார் திருப்பதிஒன்று
உளது; கொங்கில் திருப்பேரூர்;
மெய்வர்த் தனைசால் இறைவ!வல்லே
மே"வென் றுரைத்திட் டகன்றான். ஆல். (7)

*(பொழிப்புரை) நாரதர் கரிகாலனை நோக்கி, "உண்மையின் உயர்வினை உடைய மன்னனே! பயப்படாதே. நீ பல சிவத் தலங்களைத் தரிசித்ததன் பயனாகவே என்னைக் காணப் பெற்றாய். உன் கொலைப் பாவத்தைப் போக்கி உய்விக்கும் புனிதமான தலம் கொங்கு நாட்டில் உள்ள திருப்பேரூர் ஆகும். நீ விரைவாக அங்கு செல்'' என்று கூறிவிட்டுத் தன் வழியே சென்றுவிட்டார்.*

162. வானைக் காவல் ஆற்றும்இயல்
மன்னன் அனைய கரிகாலன்
தேனைக் காதில் ஊற்றும்இசைத்
தெய்வ முனியைப் புகழ்ந்தேத்தி
ஆனைக் காவில் அமர்ந்தருளும்
அமுதை அடியார்க் கருள்விருந்தாம்
கோனைக் காத லால்வணங்கிக்
குதூக லம்கொண் டமைவேலை. (8)

*(பொழிப்புரை) வானுலகை ஆளும் இந்திரனைப் போன்ற கரிகாலன் இசைத் திறமை மிக்க நாரத முனிவரைத் துதித்து வணங்கி, திருவானைக்காவில் அன்பர்களுக்குத் திருவருள் புரியும் அண்ணலாம் ஜம்புகேசுவரரை வழிபட்டுக் கொண்டு மகிழ்ச்சியாக இருக்கும் காலத்தில், (குளகமாகத் தொடரும்.)*

*நாரதரின் உபதேசப்படிப் பேரூர் வரும்வழியில் திருவானைக்காவல் வந்தான் என்பதைப் பின்னால் (10ஆம் பாட்டில்) கூறுகிறார்.*

163. இமையத் தம்மை தவம்புரிகால்,
ஏவல்(ச்) சேடி எழுவர்மலர்
அமையப் பறிக்கும் போதில்,அவண்
அணைகாந் தருவற் குளம்மயங்கிச்
சமையத் தலர்ஈ கலர்தாழ்க்கும்
தகையால், பூசை தவறுதலால்,
உமைஅக் கன்னி களைமனித
உருக்கொண் டுளம்போன் றுறுதிர்என்றாள். (9)

*(பொழிப்புரை) இமயமலையில் பார்வதி தேவி தவம் புரிந்துகொண்டிருக்கும்போது தோழிப் பெண்கள் வழிபாட்டிற்குப் பூப் பறித்துவரச் சென்றனர். அப்போது அங்கு வந்த கந்தருவன் ஒருவனைப் பார்த்து எழுவரும் காதல் வயப்பட்டதால் உரிய காலத்தில் பூசைக்கு மலர் சென்று சேரவில்லை. இதனால் கோபங் கொண்ட உமாதேவி அப் பெண்கள் எழுவரையும் மானிட மகளிராகப் பிறந்து காமம் துய்க்கச் சபித்து விட்டார்.*

*இமையம், சமையம் எதுகை நோக்கிய போலி. ஈகலர் முற்றெச்சம். உளம் போன்று – உம் விருப்பப்படி.*

164. கேட்ட மகளிர் பணிந்தயர்ந்து,
கிருபை புரிஎன் றழுதிரங்க,
"வாட்டம் தணப்பீர்; சீரங்க
வைப்பில் சார்ங்கன் மகளிர்களாய்,
நாட்டம் என்பால் அமைந்திருப்பின்,
நலம்சால் கரிகா லன்பழியை
ஓட்டப் பேரூர் குறுகிடுங்கால்
உறைவான் திருவா னைக்காவில்; (10)

*(பொழிப்புரை) அதனைச் செவிமடுத்த கன்னியர்கள் அஞ்சி வணங்கித் தயவு புரிய வேண்டும் என்று வேண்டினர். அப்போது தேவி, "வருந்தாதீர்கள். நீங்கள் திருவரங்க நகரில் சார்ங்கன் என்பவரின் குமாரிகளாகப் பிறந்து, என்னையே எண்ணி இருங்கள். கரிகால்(ச்) சோழன் தன் கொலைப்பழியைப் போக்கிக்கொள்ளத் திருப்பேரூர் செல்லும் வழியில் திருவானைக்காவிற்கு வந்து தங்குவான்.*

165. அவனோ டிசைப்பே ரூரில்அடைந்து
அகல்வீர் சாபம்" எனும்மொழியை
நவம்ஆர் உளம்கொண் டெதிர்நோக்கும்
நாளில் மன்னன் வரவுணர்ந்து,
தவம்ஆர் மகளிர் இறைஎதிர்போய்ச்
சரதம் உரைப்ப, மனம்மகிழ்ந்து,
குவடே போல்தோள் பூரித்துக்
கொடுத்தான் சிவிகை எழுவருக்கும். (11)

*(பொழிப்புரை) அந்தச் சோழனோடு புகழ் மிக்க பேரூருக்குச் சென்று வழிபட்டால் உம் சாபம் நீங்கும்" என்று உமாதேவி கூறிய சொற்படியே சீரங்கத்தில் கன்னியர் எழுவரும் பிறந்திருந்தனர். அப்போது கரிகாலன் திருவானைக்காவில் வந்து தங்கியிருக்கும் செய்தியை அறிந்து, அவன்பாற் சென்று, தம் உண்மையான வரலாற்றைக் கூறினர். இதனைக் கேட்ட மன்னன் உளம் களித்து அக் கன்னியர் ஏழு பேருக்கும் தனித்தனியாகப் பல்லக்குகளைக் கொடுத்தான்.*

166. நீதி புரியும் கரிகாலன்
நெஞ்சம் குளிர்ந்து, நெடுமன்றில்
சோதி புரிபிப் பிலவனத்தைத்
தூய புகழ்ஆர் பேரூரை
ஆதி புரியை வல்லேசென்று
அடைவேம் என்னும் ஆர்வமுடன்
பீதி புரியும் வினைகள்விடை
பெறுமா றெண்ணி அடைந்திட்டார். (12)

*(பொழிப்புரை) செங்கோல் மன்னாகிய கரிகாலன் உள்ளம் உவந்து அழகிய சிற்றம்பலத்தை உடையதும், சோதிபுரி, பிப்பிலவனம் (அரசங்காடு) ஆதிபுரி எனப் பல பெயர்களைப் பெற்று விளங்குவதுமாகிய திருப்பேரூர்த் தலத்தை விரைவில் போய்ச் சேரவேண்டும் என்னும் ஆவலோடும், அஞ்சச் செய்யும் தீவினைகள் நீங்க வேண்டும் என்னும் நினைவோடும் சென்றடைந்தனர்.*

167.புனித அருள்(க்)காஞ் சியில்படிந்து
போந்து சிவனைப் போற்றிஉளக்
கனிவில் சிவலிங் கம்பதிட்டை
கண்டு பூசித் தமைநாள்பொன்
குனிவில் பரமன் காட்சிநல்கிக்
கோதை யரைமுத் தியில்கூட்டித்
தனிஅற் புதச்சீர்க் கரிகாலன்
றான்வேண் டிடும்மெய்ச் சிறப்பளித்தான். (13)

*(பொழிப்புரை) நொய்யலாம் புண்ணிய நதியில் நீராடி, பட்டிப் பெருமானைத் துதித்து, பத்தியோடு சிவலிங்கம் ஒன்றை நிறுவி வழிபட்டுவரும் காலத்தில் சிவபெருமான் தரிசனம் கொடுத்து, ஏழு கன்னியர்களுக்கும் வீட்டுப் பேற்றை அருளி, இணையற்ற சிறப்பினையுடைய கரிகாலனுக்கு அவன் விரும்பியவற்றை எல்லாம் வழங்கினார்.*

*பொன் குனிவில் – பொன்னாலான வளைந்த வில்.*

168 "எங்குற் றிடும்போ தும்குறையா
எனதோர் பழிவே லையைப்பருகி,
மங்குற் றறச்செய் பேரூராம்
வடவா னலப்பேர் அருள்நிறைவார்
கொங்குற் றிசையும் தலங்களில்ஆம்
குழகன் கோவில்(ப்) பணிபுரிவேன்;
இங்குற் றியலும் தலங்கள்தெரிந்து
இசைப்பீர்" எனத்தூ தரைவிடுத்தான். (14)

*(பொழிப்புரை) எந்த இடத்திற்குச் சென்றும் சற்றும் குறைவுபடாத என் பாவம் ஆகிய கடலைக் குடித்து இல்லாமல் போக்கிய வடவைத் தீ ஆகிய திருப்பேரூர்த் தலம் உள்ள அருள் வளம் மிக்க கொங்கு நாட்டில் உள்ள சிவத்தலங்களில் நான் திருப்பணி புரிவேன். எனவே இப் பகுதியில் உள்ள சைவத் திருத்தலங்களை அறிந்து வருக" எனத் தன் ஆட்களை அனுப்பி வைத்தான்.*

169.பற்பல் தலமும் பார்த்தோர்ந்து
படரும் படர்இப் பதிப்பெருமை
அற்பம் அன்றென் றுணர்ந்திறைவற்கு
அறைவார் - "நினது குலமுதல்ஆம்
நற்பங் கயநா யகன் அருளும்
நமனால் பதிட்டை புரிமூர்த்தி
முற்பண் பமைகா லப்பொய்கை
முயங்கும்; காஞ்சி நிகர்த்திசையும் (15)

*(பொழிப்புரை) மிகப் பல பதிகளைக் கண்டுஆராய்ந்து வந்த சேவகர்கள் கௌசிகபுரி ஆகிய இந்தத் தலத்தின் மகிமை மிகப் பெரியது என உணர்ந்து தம் மன்னவனிடம் கூறியதாவது:– "அரசே! உம்முடைய வமிசத்தின் முதல்வனாகிய சூரியனின் மகனாம் இயமதருமனால் நிறுவப் பெற்ற சிவலிங்கமாகிய வடிவத்திற்கு எதிரில் காலப்பொய்கை என்னும் தீர்த்தம் அமைந்துள்ளதும், நொய்யலுக்கு இணையாகக் கூறத்தக்க (குளகமாகத் தொடரும்)*

170.புனிதம் மலிகௌ சிகநதியும்,
போதன் இணையாம் கௌசிகப்பேர்
முனிவன் யாகம் இயற்றிஇவண்
முயங்கும் நீற்று மேட்டையொத்து
நனிஇன் பருளும் இடம்ஒன்று
நாம் கண் டணைந்தோம்" எனவினவிக்
கனிவில்(க்) கரிகால் வளவன்அதைக்
காண்பேன் யான்என் றுளங்கொண்டே (16)

*(பொழிப்புரை) புண்ணியம் வாய்ந்த கௌசிக நதியும், பிரமனுக்கு இணையான விசுவாமித்திரர் வேள்வி செய்த – திருப்பேரூர் ஆகிய இங்குள்ளதைப் போன்றே – நல்ல சுகத்தை அளிக்க வல்ல திருநீற்று மேடு ஒன்றும் விளங்குவதுமான ஊர் ஒன்றை நாங்கள் கண்டு வந்திருக்கிறோம்" என்று சொல்ல, செவியுற்ற கரிகாற் சோழன் நான் அத் தலத்தைப் பார்ப்பேன் என்று கருதினவனாக (குளகமாகத் தொடரும்)*

*பிரமன் பேரூரில் வேள்வி செய்த இடம் திருநீற்று மேடு எனப்படுகிறது. இதனை நினைவுறுத்தும் வகையில் பிரமனுக்கு இணையான விசுவாமித்திரர் என அடை புணர்த்தது ஒரு நயம்.*

171.சீருர் இறைவன் தலத்திரளுள்
சிறந்து தன்ஓர் பழிதொலைத்த
பேரூ ரினில்ஆம் பணிமுடித்துப்
பெரிதும் போற்றி விடைபெற்றுக்
காரூர் பொழிற்கௌ சிகநதியைக்
கண்டு மகிழ்வில் குடைந்திசையால்
ஏரூர் கௌசை அடைந்து,படர்
இசைத்த செயல்முற் றுறக்கண்டான். (17)

*(பொழிப்புரை) சிவத்தலங்களுள் சிறப்புடையதும், தன் கொலைப்பாவத்தை நீக்கியதும் ஆகிய பேரூரில் செய்யவேண்டிய திருப்பணிகளை நிறைவேற்றி, மிகவும் துதித்து, விடைபெற்றுக் கொண்டு,*

*மேகங்கள் ஊரும் சோலைகளைத் தன் கரையில் பெற்ற கௌசிக நதியைப் பார்த்து, களிப்போடு நீராடி, கௌசிகபுரியை அடைந்து, தன் தூதுவர்கள் கூறிய செய்திகள் எல்லாம் முழுமையாக அங்கிருக்கக் கண்டான்.*

172. காலப் பொய்கை நீராடிக்
காலகாலே சன்றனக்குள்
சாலப் பழுத்த பேர்அன்பால்
தன்கை கொடுமஞ் சனம்ஆட்டிக்
கோலப் புதும மலர்த்தொடையல்
குயிற்றிப் புனைந்தர்ச் சித்தேத்தி,
"மூலப் பொருளே! உன்பணிகள்
முடிக்க அடியேற் கருள்"என்றான். (18)

*(பொழிப்புரை) தண்ட தீர்த்தத்தில் குளித்து, காலகாலப் பெருமானுக்குத் தன் கரங்களால் உள்ளார்ந்த பக்தியுடன் அபிடேகம் செய்து, அழகியதும் அன்றலர்ந்ததும் நல்ல நிறமுடையதுமான மலர்மாலைகளைக் கட்டி அணிவித்து அருச்சனை செய்து, "உலகம் அனைத்திற்கும் காரணம் ஆகிய பரம்பொருளே! தேவரீருக்கான திருப்பணிகளை நிறைவேற்ற அடியேனுக்கு அருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.*

173. இன்பே வடிவாம் காலகா-
லேசன் திருத்தாள் இணைப்பிரிவில்
அன்பே வடிவாம் கரிகாலன்
அமையாக் காதல் மீதூறத்
தன்பேர் அமைய ஓர்இலிங்கம்
தழைக்க அமைத்துப் பூசித்துத்
துன்பே அறியாப் பேரின்பில்
சொக்கிப் பணிகள் துவக்கினான்.

*(பொழிப்புரை) ஆனந்த ரூபனாகிய காலகாலேசனின் திருவடித் துணையை மறந்தறியாத பக்தியே வடிவெடுத்தது போன்ற கரிகாலன் குறையாத அன்பு மிகுந்து, தன் பெயரில் சிவலிங்கம் ஒன்றை நிறுவி, அதனை வழிபட்டு, துயரக் கலப்பே இல்லாத பெருமகிழ்ச்சியில் மனம் களித்தவனாகத் திருப்பணிகளைத் தொடங்கினான்.*

174. வில்லின் பணியால் பிரமகத்தி
மேவப் புரிந்து, மெல்லியலார்
சொல்லின் பணிஆற் றெனைவலிதில்
தொண்டு கொண்டு மறுமைதரும்
நல்லின் பணிஆற் றிடஅருளும்
நாதர் கௌசைப் பதியாற்குக்
கல்லின் பணிஆற் றுவன்என்னக்
கடிதில் சிற்பர்க் கறிவிப்பான். (20)

*(பொழிப்புரை) என் வில்லினுடைய செயலால் அந்தணக் கொலைப்பாவம் அடையப்பெற்றும், மகளிர்பாற் கொண்ட காதலால் அவர்வழி ஒழுகியும் வீணே திரிந்த அடியேனை வலிய வந்து ஆட்கொண்டு, மறுமை இன்பத்தையும் வழங்கும் நல்ல இனிய தொண்டுகள் செய்யும்படி அருள் புரிந்த கௌசிகப் பதி இறைவருக்குக் கற்றளி அமைப்பேன் என முடிவு செய்து சிற்பிகளுக்கு (தன் கருத்தை) அறிவித்தான்.*

175. என்னோர் முதல்ஆம் இனன்சேயாம்
இயம தருமன் றனக்கெனைப்போல்
மன்னோ தொடர்ந்த பிரமகத்தி
மாற்றும் கால காலேசற்கு
என்னோர் கைமா றேழைஇவண்
இயற்றல் உளதா லயப்பணிகள்
கொன்னோங் கிடமண் டபம்பொலிவார்
கோயில் அமைத்து முடிப்பீர்ஆல். (21)

*(பொழிப்புரை) என்னுடைய வமிசத்தின் முதல்வன் ஆகிய சூரியனின் மைந்தனாம் இயமனுக்கும் என்னைப் போன்றே அந்தணக் கொலைப் பாவம் சூழ்ந்த போது அதை ஒழித்த காலகாலப்பெருமானுக்கு என்னாலான பிரதியுபகாரமாய் அடியேன் கோயில் எழுப்பக் கருதியுள்ளேன். பெருமை மிகும்படி மண்டபங்களையும், அழகிய கருவறையும் அமைத்து நிறைவேற்றுவீர்களாக. (பொருள் தொடரும்)*

*மார்க்கண்டேயராகிய அந்தணரைக் கொல்லக் கருதிய பாவத்தாலேயே காலன் உதைபட்டு இறந்தான் என்னும் கருத்தில் அவனுக்கும் பிரமகத்தி ஏற்பட்டது என்றான். சோழன் சூரிய குலத்தான்; எனவே சூரியன் மகனுக்கு அருள்புரிந்தமைக்குத் தான் கைமாறு செய்வதாகவும் சொல்கிறான்.*

176. என்னைப் பொருளாக் கணித்திகம்சார்
இழிபோ கத்தாழ்ந் தழியாதே,
பொன்னைப் புரைதன் அடிஅமையப்
புரியும் கருணா கரவல்லி
அன்னைக் கினிதாம் திருக்கோயில்
அண்டர் புகழும் படிஆற்றி,
முன்னைத் தேவாம் கற்பகப்போ்
முதல்வன் றனக்கும் புரிதிர்" என்றான். (22)

*(பொழிப்புரை) அடியேனையும் ஒரு பொருட்டாகக் கருதி, இவ்வுலகியலைச் சேர்ந்த கீழான இன்பநுகர்ச்சிகளில் மூழ்கி வீணாகாமல் தன்னுடைய பொன்னைப் போன்ற திருவடிகளில் பொருந்தும்படி செய்த கருணாகரவல்லித் தாயாருக்கும், முதலில் வழிபடுதற்குரிய கற்பக*

*விநாயகருக்கும் தேவர்களும் கண்டு புகழும்படி ஆலயங்களை எழுப்புங்கள் என்று கூறினான்.*

177. நீறு முகம்கொண் டறியாத
நீசக் சமணக் கொடியோர்பொய்
ஏறு முகங்கள் முற்றும்அயர்ந்து
இறங்கு முகம்ஆம் படிபுரிந்தே
ஆறு முகத்தெம் மங்கையர்கட்கு
அரசிக் கிம்மை மறுமைஇசைப்
பேறும் உகப்பில் நல்குகுகப்
பெம்மான் வடிவேல்(ப்) பெருமாற்கே (23)

178. ஆம் ஆக் கம்தம் பால்(ப்) பொருந்தும்
அடலால் இடர்மிக் கிமையோர்க்குத்
தாம்ஆக் கந்தத் தானவரைச்
சாடி அமரர்க் கருள்புரிந்த
தேம்மாக் கந்தம் இளமைபொலி
திருச்சண் முகத்தெம் தேசிகனார்
சோமாக் கந்த ராய் அமைந்து
துலங்கக் கோயில் அமைப்பீர்.ஆல். (24)

*(பொழிப்புரை) தம் முகத்தில் திருநீற்றை அணிந்தறியாத கீழான சமணர்களின் பொய்ம்மைகள் யாவும் வளர்ந்து வரும் நிலையை மாற்றி, அவற்றை மறையச் செய்து, அதனால் மனநிறைவடைந்தவராகிய எம் வணக்கத்திற்குரிய மங்கையர்க்கரசி ஆகிய பாண்டிமாதேவிக்கு இம்மை மறுமைப் பயன்களை மகிழ்ச்சியோடு அருளிய திருஞான சம்பந்தப் பெருமானாக அம்சாவதாரம் கொண்ட முருகப் பெருமானுக்கு (23)*

*வளருகின்ற செல்வமும் வலிமையும் தம்மிடம் மிக்கிருந்த காரணத்தால், தேவர்களுக்கு அதிகமான துன்பங்களை (காரணம் இல்லாமல்) தாமாகச் செய்தவர்கள் ஆகிய அந்த அரக்கர்களைக் கொன்று வானவர்களுக்கு அருள் பாலித்த இனிமையும் பெருமையும் மிக்க கருணையால் சிறந்து விளங்குபவர் ஆகிய ஆறுமுகப் பெருமானாம் எம் குருநாதர் தம் அம்மைக்கும் அப்பருக்கும் இடையே எழுந்தருளிக் காட்சி வழங்கும் சோமாக் கந்த மூர்த்தமாக அமையுமாறு ஆலயத்தைக் கட்டுங்கள். (24)*

*முதல் பாடலில் முருகப் பெருமான் ஆளுடைய பிள்ளை ஆக உலகில் வந்து மறைகளுக்கு எதிரான சமண் சமயத்தை ஒழித்து வைதிக நெறியை நிலை நிறுத்தியதையும், அடுத்ததில் மறைவழி ஒழுகினவர்களுக்கு இடுக்கண் செய்த அரக்கரை அழித்து, வானுலகில் அருள் பாலித்ததையும் விளக்கினார்.*

*ச உமாஸ் கந்த என்னும் வடசொற்கள் சோமாஸ் கந்த என்று புணரும். உமையோடும் முருகப் பெருமானோடும் கூடியவர் (சிவபெருமான்) என்பது பொருள். சோமாக்கந்த வழிபாடு சைவத்தில் மிக்க சிறப்புடையது. "தொல்லை உலகம் போற்றெடுக்கும் சோமாக் கந்தர் தமைத்தாழின் நல்ல மகவும் சந்தானத் தொடர்பும் இனிது நல்குவார்" என்பது பேரூர்ப் புராண வாக்கு. (காலவன் வழிபடு. 15)*

*இரண்டாவது செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி பயின்றுள்ளது. தம்பால் பொருந்தும் ஆம் ஆக்கம் அடலால் எனக் கூட்டுக. ஆக்கம் அடல் என்புழி எண்ணும்மை விரிக்க. அந்த என்பது பண்டறி சுட்டு. தேம் மா என்னும் இரண்டும் கந்தத்திற்கு (கருணை) அடை. இங்கும் இளமை என்புழியும் எண்ணும்மை விரிக்க. கந்தத்தை உடையவன் கந்தன் எனத் தொனிப்பொருள் காண்க. முருகப் பெருமானைக் குருநாதராகப் போற்றுவது கௌமார நெறி.*

179. வருத்தம் புரியும் கொடும்மூல
மலம்சேர் ஆவித் திரள்கள்உளம்
திருத்தம் புரியும் படிஅருள்ஆர்
சிவகா மித்தாய் கண்டுவப்ப,
நிருத்தம் புரியும் பெருமான்றன்
நிகழும் கனக சபைஉலகோர்
பொருத்தம் புரியும் பணிஎன்னப்
புரிசை மடைப்பள் ளிகள்அமைப்பீர். (25)

*(பொழிப்புரை) துன்பத்தைத் தருகின்ற கொடிய ஆணவ மலத்தோடு இயற்கையாகவே பிணைந்துள்ள உயிர்க் கூட்டங்கள் எல்லாம் நல்ல மனநிலைமையைப் பெறவேண்டும் என்பதற்காக, திருவருட் சத்தியாகிய சிவகாமியம்மை தரிசித்து மகிழும்படி திருக்கூத்தியற்றும் நடராசப் பெருமானுக்கான பொன்னம்பலத்தையும், திருமதில், நிவேதனங்களைச் சமைக்கும் கோயிற் சமையலறை முதலியவற்றையும் ஆகமசாத்திரம் அறிந்த பெரியவர்கள் சரியாக அமைந்துள்ளது எனக் கூறுமாறு நிறுவுங்கள்.*

*தம் குழந்தைகளுக்காகத் தாய் மருந்து உட்கொள்வதைப் போல உயிர்கள் உய்வடையவே சிவகாமித்தாய் நடன தரிசனம் செய்கிறார் என்பது சைவ நூற்றுணிபு. "இளம்குழவிப் பிணிக்கீன்ற தாய் மருந்து நுகர்வது போல் இருளின் மாண்ட, களம் குலவு மலம் உயிர்கட் கொழிய அருள் நடம் காணும் கடன்மீக் கொண்டு, வளம் குலவு தனது பெரும் கற்பும் ஒரு கணவர் இறை மாண்பும் தோன்ற, விளங்கும் இரணியமன்றில் நின்றருளும் மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்" (திருவானைக்காப்புராணம் - கடவுள் 7) என்பது கச்சியப்பரின் கருத்துரை.*

*உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே என்பதாலும், இடம் நோக்கியு இங்கு ஆகமம் அறிந்த பெரியவர்கள் என உரைக்கப் பெற்றது. என்னை? ஆலய அமைப்பின் பொருத்தம் உணர்ந்து உரைக்கத் தக்கவர் அவர்களே ஆதலின்.*

*கனகசபை, புரிசை, மடைப்பள்ளிகள் உலகோர் பொருத்தம் என்ன அமைப்பீர் என இயையும்.*

180. திருக்கல் யாண மண்டபம்உள்(ச்)
சேர்ந்தோர் தங்கள் மனம்என்னும்
உருக்கல் யாணர் படைத்தமைய
உஞற்றி, மேகத் திடிஅஞ்சச்
செருக்கல் யாணத் தொனிச்சேமுற்
சேர்வா கனம்ஆர் மண்டபமும்
பெருக்கல் யாணர் ஆம்உமது
பேர்நின் றிடவே பிறக்கிடுவீர். (26)

*(பொழிப்புரை) அம்மையப்பரின் திருமண மன்றத்தை அதற்குள் நுழைவோரின் மனமாகிய பெரிய கல் (தன் கடுமையாகிய இயல்பினை மாற்றி) புதுமையான அன்பைப் பொருந்தி அமைதியுறும்படி நிர்மாணித்து, மேகங்களில் தோன்றுகின்ற இடியும் பயப்படும்படி நன்மையைத் தரும் போர் முழக்கத்தைப் பெற்றுள்ள இடபம் முதலாகிய ஊர்திகளுக்கான வாகன மண்டபத்தையும் விசாலமான கட்டிடங்களை இயற்றவல்ல தச்சர்களாகிய நீங்கள் உம்முடைய புகழ் நிலைபெற்று நிற்கும்படி இயற்றுங்கள்.*

*இரண்டாம் அடியில் யாணர் என்னும் சொல் புதுமைப் பொருளும் ஈற்றடியில் தச்சர் என்னும் பொருளும் தந்து நின்றது. இப்பாடல் திரிபு.*

181. நஞ்சாய் உலகத் தவரைஉளம்
நலியப் புரிவார் தமைச்சாடப்
பஞ்சா யுதங்கள் தரித்தாற்குப்
பகுவாய்க் கராவாய்க் கசேந்திரனை
அஞ்சா தருளி உயர்ஆதி
மூலப் பொருளாய் அமைந்தாற்கு
மஞ்சார் கரிவ ரதராச
மணிக்கும் கோயில் புரிவீரால். (27)

*(பொழிப்புரை) உலக மக்களை மனம் வருந்தச் செய்யும் விடத்தைப் போன்ற தீயவர்களை அழிக்கச் சக்கரம், வில், வாள், கதை, சங்கு என்னும் ஐம்படைகளை ஏந்தியவரும், முதலையின் வாயிற் சிக்கிய கசேந்திரனை அச்சத்தினின்றும் நீக்கிப் பாதுகாத்த ஆதிமூலம் ஆனவரும், மேகத்தைப் போன்ற நிறத்தினரும் ஆகிய கரிவரத ராசப் பெருமாளுக்கும் ஆலயம் எழுப்புங்கள்.*

82. பேணும் இமையோர்க் கிரங்கிஉரம்
பெற்ற மயிடற் சாடி,இசை
பூணும் அம்மை; கௌசைநகர்
புரக்கும் அம்மை; எம்விழிநேர்
காணும் அம்மை ஓங்குதிருக்
காளி யம்மை கவின்றிடவே
சேணுந் திமையோர் வியக்கும்அணித்
திருக்கோ யிலைஆக் குதிர்என்றான். (28)

*(பொழிப்புரை) தன்பால் வந்து முறையிட்டுப் போற்றிய தேவர்களின் துயரத்தைக் கண்டு மனம் கனிந்து வலிமை மிக்க மகிடாசுரனை வதைத்துப் புகழ் கொண்டவரும், கௌசிகபுரியின் காவல் தெய்வமும், எமக்குக் கண்கண்ட கடவுளும் ஆகிய பெருமை மிக்க காளியம்மனுக்கும் வானுலகத்தோரும் பார்த்து அதிசயிக்கும்படி அழகிய ஆலயத்தை அமையுங்கள் என்று கூறினான்.*

183. கரிகால் வளவன் உரைத்தவண்ணம்
கருத்தில் அமைத்துச் சிற்பர்பணி
புரிகா லத்தில் ஆண்டிறைவன்
பூசை நைமித் தியம்நித்தம்
விரிவார் அன்பில்(ச்) செய்தமைய
விதிமா றாத பற்பலவாம்
பரிவா ரங்கள் அமைத்தவர்க்குள்(ப்)
பரிவால் நிதிஆ தியஅளித்தான். (29)

*(பொழிப்புரை) கரிகாற் சோழன் கூறியவற்றை எல்லாம் மனத்தில் பதித்துக் கொண்டு சிற்பிகள் திருப்பணிகளைச் செய்து கொண்டிருக்கும் போதே, இறைவனின் நாள் சிறப்பு வழிபாடுகளுக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் ஆகம நெறிமுறைகளுக்கு மாறுபாடில்லாமல் செய்து, தேவையான பணியாளர்களையும், நிதி வசதிகளையும் விரிவாகப் பக்தியோடு கரிகாலன் நிறைவேற்றினான்.*

184. உறையும் மனைகள் பற்பலவும்
உடைஊண் ஆதி நலங்களுக்கோர்
குறையும் எய்தா திசைவித்து
கூறும் தனதோர் இசைவித்து
நிறையும் வடம்ஆர் தருப்போல
நீண்டு செழிப்புச் சேர்அன்பால்
முறையுந் திடப்பொன் ஈந்துமிக
முதிர்மா னியங்கள் பலஅமைத்தான். (30)

*(பொழிப்புரை) பணியாளர்களுக்கு வீடு, உடை, உணவு முதலிய நலங்களுக்குக் குறைவு இல்லாமல் ஏற்படுத்தி, தன்னுடைய ஒரு சிறிய விதையிலிருந்து வளர்ந்தோங்கிப் பொலியும் ஆலமரம் போல இந்தச் சிவ தருமம் செழித்துப் பல்குவதற்கு வேண்டிய செல்வத்தையும், மானியமாக நிலங்களையும் ஏராளமாகப் பக்தியோடு கரிகாலன் வழங்கினான்.*

185. இவ்வா றியலும் காலத்தில்
இயற்றும் பணிகள் முடிவடைந்து
செவ்வா ரிசமின் பொலியும்மணித்
திருமால் துளபம் பெறுமார்பம்
ஒவ்வா விளங்கும் தன்மைதெரிந்து,
உள்ளத் துவகை உற்றிமையோர்
துவ்வார் அமுதுண் டெனக்கரிகால்(ச்)
சோழன் இன்பம் துளும்பினான். (31)

*(பொழிப்புரை) இவ்வாறு எல்லா ஏற்பாடுகளும் திருப்பணிகளும் முற்றுப் பெற்று, செந்தாமரைச் செல்வியாகிய திருமகள் கௌத்துப மணியும் திருத்துழாய் மாலைகளும் இலங்கும் திருமாலின் மார்பில் உறைவதைப் போல மகிழ்ச்சியுடன் எழுந்தருளியிருப்பதை அறிந்து (லக்ஷ்மீகரம் நிறைந்துள்ளதை உணர்ந்து) கரிகால் வளவன் தேவாமிர்தத்தினை உண்டது போன்று பெரும் களிப்படைந்தான்.*

*பொலியும் மணி துளபம் பெறு திருமால் மார்பம் ஒவ்வா (ஒத்து) செவ் வாரிசமின் விளங்கும் தன்மை எனக் கூட்டுக.*

186. அண்டர் வியந்து கொண்டாடி
அணிமா மலர்கள் மிகச்சொரிய
விண்ட ஐந்து கருவிஒலி
விம்மி மேகத் திடிவிளர்ப்பக்
குண்ட மண்ட லம்வேதி
குயிற்றி யாகம் புரிந்துகும்பம்
கொண்ட புனல்மூர்த் திகட்குள்ளம்
குளிரும் படிஆட் டினன்அம்மா! (32)

*(பொழிப்புரை) தேவர்களும் வியப்படைந்து போற்றி அழகிய சிறப்பமைந்த பூக்களைச் சொரிய, தோற் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்று கூறப்பெறும் ஐவகை இசைக் கருவிகளும் இடியைப் போலப் பெரிதும் முழங்கி ஆர்ப்ப, வேள்விக் குண்டங்களும், கலச வேதிகைகளும் அமைத்து, ஹோமம் செய்து நிறுவிய இறைத் திருமேனிகளின் உள்ளம் குளிரும்படி திருக்குட முழுக்கு விழாவைச் செய்தான்.*

187.சிறப்பார் அபிடே கங்கள்எலாம்
செய்வித் துயர்அர்ச் சனைபூசை
திறப்பார் மாகே சுரபூசை
திகழும் தானம் மிகஇயற்றிப்
புறப்பா டமையும் உலாவும்இன்பம்
பொங்கப் புரிந்து மானிடம்ஆர்
பிறப்பால் அமையும் பயன்முழுதும்
பெற்றேன் பெற்றேன் என்றார்த்தான். (33)

*(பொழிப்புரை) நல்ல முறையில் மகாபிடேகம் செய்வித்து, அர்ச்சனை முதலிய வழிபாடுகளை முழுமையாகச் செய்து, சமயநெறிகளை விளக்கி உரைப்பவர்களுக்கு உணவூட்டுதல், புகழ்மிக்க அறக்கொடைகள் ஆகியனவற்றை நிறையச் செய்து, திருவீதி உலாவும் புரிவித்து, மனிதனாகப் பிறந்த பயனைப் பெற்றுவிட்டேன் எனக் களித்துக் குதூகலித்தான்.*

*"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிஆடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல், கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்" (பெரிய. திருஞான.1087) என்பதனை நினைவூட்டுகிறது இச் செய்யுள்.*

188.இன்ன வகையில் தொழுதேத்தும்
இன்பக் கரிகா லன்விழியின்
முன்னர் அமைந்த மூர்த்திஎலாம்
முதிரும் கருணை யுடன்உனக்காம்
என்ன நலங்கள் தாமும்என
இசைத்தல் ஓர்ந்தான்; இருவிழிநீர்
தன்ன தகலம் நின்றிழியத்
தகுபேர் இன்பக் கடல்படிந்தான். (34)

*(பொழிப்புரை) இவ்வாறு பணிந்து போற்றி மகிழ்ந்த கரிகாற் சோழனின் கண் எதிரே தரிசனம் அளித்து, அங்கு எழுந்தருள்விக்கப் பெற்ற இறைவடிவங்கள் எல்லாம் பெருங்கருணையோடு "நீ எந்தப் பயனை விரும்பினாலும் அவை உனக்குக் கிடைக்கும்" என்று கூறியருளியதை உணர்ந்தான். சோழ மன்னன் இரு கண்களும் பொழியும் கண்ணீர் அவருடைய மார்பில் விழுந்து கீழ் இறங்க மிகுந்த மகிழ்ச்சிக் கடலில் திளைத்திட்டான்.*

189. அகரத் திசையும் அந்தணர்கள்
ஆதி யாம்பல் வகைக்குடியும்
நிகரற் றிலங்கும் திருக்கோயில்
நியமப் பணிக்காக் குடியேற,
நகரம் பிரவே சம்புரிந்ததெந்
நாளும் குறையற் றமையூர்க்குப்
பகரத் தகுநற் பெயர்கோயிற்
பாளை யம்மென் றிசைத்திட்டான். (35)

*(பொழிப்புரை) அக்கிரகாரத்தில் வசிக்கும் வேதியர்கள் முதலான பற்பல வகையான மக்களும் இணையற்ற திருக்கோவிலில் முறையாக ஆற்ற வேண்டிய தொண்டிற்காக வசிக்க வாய்ப்பாக நகரத்தை உண்டாக்கி, எப்போதும் எவ்விதக் குறையும் இல்லாத இந்த ஊருக்குக் கோயில்பாளையம் என்று பெயரிட்டான். பாளையம்மென்று என்புழி யாப்பு நோக்கி மகரமெய் விரிந்தது.*

190. தழைக்கும் கால காலேசன்
றன்னை, கருணா கரக்கொடியை
புழைக்குஞ் சரக்கற் பகக்களிற்றை,
போர்வேல் இறையை, நடத்தரசை,
அழைக்கும் கரிகாத் தருள்மாலை,
அணிஆர் கௌசைக் காளிதனை
மழைக்கு நிகர்கைக் கரிகாலன்
வணங்கி வணங்கி வாழ்த்தியே, (36)

*(பொழிப்புரை) காலகாலேச்சுரர், கருணாகரவல்லி, தொளையைப் பெற்ற துதிக்கையினை உடைய யானையாகிய கற்பக விநாயகர், வேலாயுதராம் முருகக் கடவுள், ஆடல்வல்லான், ஆதிமூலமே என விளித்த கசேந்திரனைக் காத்த கரிவரதராஜப் பெருமாள், எல்லையைக் காக்கும் காவல் தெய்வமாகப் பொருந்தியுள்ள கௌசைக் காளியம்மன் ஆகிய கடவுளர்களை எல்லாம் மாரியைப் போல வழங்குகின்ற வள்ளன்மையை உடைய கரிகாற் சோழன் பல முறை வணங்கிப் போற்றி (குளகமாகத் தொடரும்)*

191. விடைகொண் டிலங்கும் கேதனம்சார்
வியன்ஆர் கால காலேசர்
கடைகொண் டிசைபேர் அருள்புரியக்
கனிந்து வணங்கித் தன்நகர்க்கு
விடைகொண் டடைந்தான்; அன்னவன்வாய்
விளம்பும் கோயிற் பாளையம்ஆம்
நடைகொண் டமையும் திருநாமம்
நாம்போற் றிடுவான் விளங்கியதே. (37)

*(பொழிப்புரை) ஆனேற்றைக் கொடியாக உடைய பெருமை மிக்க காலகாலப்பெம்மான் கடைக்கண்ணால் நோக்கித் திருவருள் புரியக் கரிகாலன் உள்ளம் உருகி அவரை வழிபட்டுத் தன் நகரத்திற்குப் போய்அடைந்தான். அவனால் சூட்டப் பெற்ற கோயில்பாளையம் என்னும் தெய்வீகமான திருப்பெயர் உலக வழக்கில் நிலை பெற்று இன்றும் நாம் கூறுமாறு துலங்குகிறது.*

*கரிகாற் சோழன் திருப்பணிப் படலம் முற்றிற்று*

**உண்மை**

192. இன்ன சரிதம் என்போதத்து
இசைத்த தோ?இன் போங்குபிர-
சன்ன கருணா கரவல்லித்
தாய்தோய் கால காலேசர்
பன்ன வரைந்த தோ?எனும்சீர்
பகர யானும் துணிகில்லேன்;
வன்ன வெண்டா மரையில்வளர்
வாணி விளக்கும்; சத்தியமே.

*(பொழிப்புரை) இந்தக் கௌசைத் தல வரலாற்றை அடியேன் என் அறிவின் வலிமையால் இயற்றினேனோ அல்லது ஆனந்தமயமான கருணாகர வல்லித் தாயாரை அணையும் காலகாலப் பெருமான் என் உளத்தில் நின்று உரைக்க இயற்றினேனோ என்னும் தன்மையை எளியேன் கூறத் துணிய மாட்டேன். அழகிய வெள்ளைத் தாமரைப் பூவில் வதியும் கலைமகளே விளக்குவாள். இது நிசம் ஆகும்.*

**திருப்பணிப் பயன்**

*(வேறு)*

193. பொருப்பணி மாடக் கௌசைப் புரக்கால காலே சற்காம்
திருப்பணி இயற்றும் தொண்டில் சிறந்தவிர் கரிகா லன்போல்
விருப்பணி அன்பி னாலே விளக்குமெய்ச் செல்வர் கேழல்
மருப்பணி இறைவன் இன்ப வாழ்வினுக் குரியர் மெய்யே.

*(பொழிப்புரை) மலையைப் போன்று உயர்ந்து அழகினைப் பெற்று விளங்கும் மாடங்களை உடைய கௌசை நகரின் காலகாலப் பெம்மானுக்குரிய திருப்பணிகளைச் செய்யும் திருத்தொண்டில் சிறந்து விளங்கிய கரிகாற் சோழனைப் போல, இயல்பான வேட்கை பொருந்திய பக்தியினால் இந்நாளிலும் திருப்பணி செய்கின்ற ஆன்மீகச் செல்வர்கள் பன்றிக்கொம்பை அணிந்துள்ளவராகிய சிவபெருமானால் அருளப்படும் இன்பம் நிறைந்த வாழ்க்கையைப் பெற்று மகிழ்வதற்குரியவர் ஆவர் என்பது உண்மை.*

*இன்ப வாழ்வு என்பதற்குச் சிவபதம் எனினும் அமையும். ஈற்றேகாரம் தேற்றம்.*

## நூற்பயன்

*(எழுசீர் விருத்தம்)*

194 அருள்பொலி கருணா கரவல்லி மகிழும்
அற்புதக் காலகா லேசன்
தெருள்பொலி அடியார்க் கருள்புரிந் திடுசீர்
செப்பிடும் வைப்பிணை யாம்இப்
பொருள்பொலி காதை படிப்பவர் கேட்போர்
புகல்பவர் மகிழ்வுறப் புரிவோர்
மருள்பொலி துன்ப வலைப்படா இன்ப
வாரிதி யூடமை வாரே.

*(பொழிப்புரை) அருள்வளம் மிகுந்த கருணாகர வல்லியால் விரும்பப் பெறும் ஞானமயமான காலகாலப் பெருமான், தெளிவமைந்த தன் அன்பர்களுக்குத் திருவருள் செய்யும் சிறப்பைக் கூறுகின்றதும் பொக்கிஷத்திற்கு நிகராகியதும் உண்மையானதும் ஆகிய இந்தக் கௌசைப் புராண நூலை ஓதுபவர்களும், செவி மடுப்பவர்களும், சொல்பவர்களுக்கு நிறைவை உண்டாக்குபவர்களும் இருள் மயமான வருத்தங்களில் சிக்காமல் உவகைக் கடலுள் ஆழ்வர்.*

## வாழி விருத்தம்

*(அறுசீர் விருத்தம்)*

195 இலங்கிசைக்கோ யிற்கௌசை நகர்வாழ்க!
காலகா லேசன் வாழ்க!
துலங்குகரு ணாகரப்பேர்க் கொடிவாழ்க!
கற்பகமும் துணையும் வாழ்க!
நலங்கொண்ட ராசர்,கரி வரதராசன் பணிசெய்
நல்லோர் வாழ்க!
புலங்கொள்மறை யோர்இறைவர் வாழ்க!காலம்
முற்றும்இன்பம் பொங்கி வாழ்க!

*(கோயில் இலங்கு இசை என மாறுக, ஆலயத்தால் மிக்க புகழைப் பெற்றுள்ள. கற்பகம் – கற்பக விநாயகர். துணை – அவர் தம்பியாகிய முருகப் பெருமான். நலங்கொண் ராசர் என்றது ஆன்ம வர்க்கங்களுக்கு உய்வளிப்பதற்காகத் தான் திருக் கூத்தியற்றும் நடராசப் பெருமானை. ராசர், வரதராசன், நல்லோர் ஆகிய மூவிடத்தும் எண்ணும்மை விரிக்க. புலம் கொள் – ஞானத்தைப் பெற்றுள்ள.).*

*கௌசைப் புராணம் முற்றிற்று.*

# கௌசைத் திருக்கோயில் முகப்புத் தோற்றம்





ஆலம் தான்உகந் தமுதுசெய் தானை
　　ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்
சீலம் தான்பெரி தும்உடை யானைச்
　　சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை
　　என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
　　காணக் கண்அடி யேன்பெற்ற வாறே.